

# பரிசுத்த ஆவியானவர்



ஸ்தானாபதி

திருநெல்வேலி - 627005.

## இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் அன்பின் வாழ்த்துக்கள்

ஏறக்குறைய *7* ஆண்டுகளாக பல இடங்களிலிருந்து சேகரித்த சுமார் *200* ஆண்டுகளுக்கு முன்பு வரை அச்சடிக்கப்பட்ட, ஆரோக்கிய உபதேசங்கள் அடங்கிய, கிறிஸ்தவ ஆவிக்குரிய புத்தகங்களை, பல மணி நேரம் கொடுத்து, பல இலட்சங்கள் செலவு செய்து மின் நூல்களாக *(E-Books)* இலவசமாக (மத்தேயு *10:8*) உங்கள் கரங்களில் கொடுப்பதற்கு, அற்பரும் நீசருமான எங்களை பயன்படுத்தின உன்னத தேவனுக்கே சகல கனமும் மகிமையும் துதியும் உரித்தாவதாக. இதைப் போன்ற இன்னும் ஆயிரக்கணக்கான புத்தகங்களை தரவிறக்கம் *(Download)* செய்ய எங்களுடைய இணையதளத்தை சொடுக்கவும்/பார்க்கவும்: *www.WordOfGod.in*

*95* சதவீத புத்தகங்கள் அச்சில் இல்லாதவைகளும், காப்புரிமை முடிந்தவைகளுமே. மீதமுள்ள புத்தகங்கள், நல்ல உபதேசங்களை கொண்டிருப்பதால், முடிந்தவரை ஆசிரியரின் உரிமையோடு மின்-நூலாக, இலவசமாக வெளியிடுகிறோம். ஒருவேளை உங்களுடைய புத்தகம் இப்படி இலவசமாக மின்-நூல் *(E-Book)* வடிவில் வரக்கூடாது என்று நினைத்தீர்களானால், தயவு செய்து எங்களை மன்னித்துக்கொள்ளுங்கள். எங்களுடைய *WhatsApp* எண்ணிற்கோ, மின் அஞ்சலிலோ *(Email)* எங்களுக்கு தெரியப்படுத்துங்கள். உடனடியாக எங்களுடைய இணைய-தளத்திலிருந்து எடுத்துவிடுகிறோம்.

*WhatsApp/SMS: +91 90 190 490 70 / +91 7676 50 5599*

*Email: wordofgod@wordofgod.in*

## *Wishing you in the mighty name of Jesus Christ*

*We had collected several thousands of old Tamil Spiritual Books which are rich in Sound Doctrines across various places of India for 7 years. Some of them are more than 200 years old books. We have spent millions of hours and money in scanning them and coverting them to E-Books. The work is still in progress. These E-books are published completely free of cost (Matt 10:8) forever. We give all the praise and glory to God for giving this wonderful opportunity to server Him. You can download thousands of similar Tamil Christian E-books from our website www.WordOfGod.in completely free of cost at any time.*

*95% of these E-Books are not being printed now and their copyrights are already expired. The remaining books are sent as E-Books mostly with the permission from the Authors. If you feel that your books should not be published as E-Book freely, kindly execuse and forgive us. Please let us know the book details by WhatsApp or Email we will remove them from our website.*

*WhatsApp/SMS: +91 90 190 490 70 / +91 7676 50 5599*

*Email: wordofgod@wordofgod.in*

பிரசுரிப்போர் :

ஸ்தாணுபதி டிரஸ்ட்

நிர்வாக அலுவலகம்,

51E/4, அம்பை ரோடு,

குலவணிகர்புரம்,

திருநெல்வேலி - 627 005.

(தொலைபேசி : 0462 - 2580468)

கிளை அலுவலகம் :

CI HBI பிளாட்ஸ்

25. குட்டியப்பன் 2வது தெரு.

கீழ்ப்பாக்கம், சென்னை - 600 010.

(தொலைபேசி : 044-26423685)

Printed at Senthil Press, Tirunelveli-2. Cell : 98942 19201

## பிரசுரிப்போர் குறிப்பு

'ஸ்தானுபதி' பத்திரிக்கையில் இப்புத்தகத்தின் பல பகுதிகள் வெளியிடப்பட்ட போது அநேக விசுவாசிகள் இப்பகுதிகளினால் வேத வசனத்தின் வெளிச்சத்தில் பரிசுத்த ஆவியானவரைப் பற்றிய சத்தியம்களில் தெளிவு பெற்று ஆசீர்வதிக்கப்பட்டார்கள் என அறிந்து கர்த்தரைத் துதித்தோம். சில விசுவாசிகள் எங்கள் அனுமதியுடன் இப்புத்தகத்தின் சில பகுதிகளை துண்டு பிரதிகளாக அச்சிட்டு விநியோகித் துள்ளார்கள். அவர்களில் பலர் இக்காலத்துக்கு மிகவும் பிரயோஜனமான இச்சத்தியங்கள் புத்தக வடிவில் வெளியிடப்பட்டால், இச்சத்தியத்தில் குழப்பமுற்று வாடித்தவிக்கும் பல விசுவாசிகள் பயன்பெற முடியும் என அபிப்பிராயம் தெரிவித்ததின் பேரில் இப்புத்தகத்தின் முதல் பதிப்பு 1996ம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது. அப்புத்தகத்தில் சில குறிப்புகளை சேர்த்து அதன் மூன்றாவது பதிப்பாக இதை வெளியிடுகிறோம்.

பரிசுத்த ஆவியானவரைப்பற்றி வேதம் போதிக்கும் சத்தியங்களில் வலதிடது பக்கம் சாயாமல் சத்தியத்தை சத்தியமாக உங்கள் முன் வைக்கிறோம். ஆகவே சத்தியத்தை நேசிக்கும் விசுவாசிகள் இப்புத்தகத்தினால் பெரிதும் பயன் பெறுவார்கள் என்பது திண்ணம். வாசகர்களின் கருத்துக்களை எதிர்பார்க்கிறோம்.

இப்புத்தகம் வெளிவர ஜெபித்து பல விதங்களில் எங்களுக்கு உதவிய தேவ மக்களுக்காக கர்த்தரைத் துதிக்கிறோம்.

திருநெல்வேலி
டிசம்பர் 2013

D. ராஜசிங் சைமன்
செயலர்
ஸ்தானுபதி டிரஸ்ட்

# பொருளடக்கம்

1

# பரிசுத்த ஆவியானவரின் வருகை

பரிசுத்த ஆவியானவரைப் பற்றி பலவிதமான போதனைகள் நிலவும் காலத்தில் நாம் வாழ்கிறோம். விசுவாசிகளாகிய நமக்கு அருளப்பட்டுள்ள தேவ ஆவியானவர் சத்திய ஆவியாக (யோ. 16:13) இருப்பதால் அவர் தம் ஜனங்களை சகல சத்தியத்திலும் வழி நடத்த வல்லவராக இருக்கிறார். ஆகவே பரிசுத்த ஆவியானவரைப் பற்றி அவர் தாமே நமக்கு வேதத்தில் எழுதிக் கொடுத்துள்ள போதனை நம்மை இந்த விஷயத்தில் தெளிவுள்ளவர்களாக்கும். மனுஷனின் போதனைகளும் அனுபவங்களும் நம்மை குழப்பத்துக்குள் தான் கொண்டு போய் விடும். தேவன் தம் மக்களுக்கு ஒரு காரியத்தைக் கற்றுக் கொடுக்கும் போது அது எவ்வளவு பெரிய சத்தியமாயிருந்தாலும் அதை மிகவும் எளிதாகவும் இலகுவாகவும் புரிந்து அனுபவிக்க கூடிய அளவிலேயே இருக்கும்.

வேத புத்தகத்தில் பரிசுத்த ஆவியானவரைப் பற்றிய போதனையும் சாதாரண விசுவாசிகள் கூட எளிதாக புரிந்துக் கொள்ளக் கூடிய வண்ணமாகவே நமக்கு அருளப்பட்டுள்ளது. வேதாகமம் முழுவதும் பரிசுத்த ஆவியினாலே ஏவப்பட்ட தேவனுடைய பரிசுத்த மனுஷர்களால் எழுதப்பட்டுள்ளதென்பது ஓர் மாபெரும் சத்தியமாகும். (2 பேதுரு 1:19-21) இந்த சத்தியத்தை மனதார ஏற்றுக் கொள்ளும் எந்த விசுவாசியும் வேதத்தின் எந்தப் பகுதியையும் எளிதாகப் புரிந்துக் கொள்ள முடியும். வேதத்தின் முதல்பக்கம் முதல் கடைசி பக்கம் வரையுள்ள வேதவாக்கியங்களனைத்தும் தேவனுடைய பரிசுத்த மனுஷர்களால் பரிசுத்த ஆவியினாலே ஏவப்பட்டு எழுதப்பட்டவைகளாகும் என்ற சத்தியத்தை ஏற்க மறுத்து தங்கள் அனுபவங்களையும், உணர்ச்சிகளையும் உலகஞானத்தையும் கொண்டு தேவனுடைய வழிகளில் நடக்க விரும்பும் மக்களோ எதையும் புரிந்து கொள்வதில்லை.அவர்கள் தாங்கள் சத்தியத்தில் குழம்புகிறவர்களாகக் காணப்படுவதோடல்லாமல் மற்றவர்களையும் குழப்பத்துக்குள்ளாக்கு கிறவர்களாயிருப்பார்கள். தேவன் தம் பிள்ளைகள் மனரம்மியமாக அனுபவிக்க அளித்துள்ள விசுவாச வாழ்க்கையை இவர்கள் அனுபவிக்கக் கூடாமல் வாழ்நாள் முழுவதும் சந்தேகத்திலும் விசாரத்திலும் ஜீவிக்கிறவர் களாகக் காணப் படுவார்கள். இப்படிப்பட்ட நிலையிலுள்ள விசுவாசியாக நீ இருந்தால் சகோதரனே, சகோதரியே இச்சிறுபுத்தகத்தை ஜெபத்தோடு படி. தேவன் நிச்சயமாய் உன்னோடு பேசுவார்.

பரிசுத்த ஆவியானவர் திரித்துவத்திலே ஒருவர் என நாம் அறிவோம் (1 யோவா 5:7) ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து இவரைப் பற்றிக் கூறும்போது "நான் பிதாவை வேண்டிக் கொள்ளுவேன் அப்பொழுது என்றென்றைக்கும் உங்களுடனே கூட இருக்கும் படியாக சத்திய ஆவியாகிய வேறொரு தேற்றரவாளனை அவர் உங்களுக்குத் தந்தருள்வார்". என்றும் "நான் போகிறது உங்களுக்குப் பிரயோஜன மாயிருக்கும் நான் போகாதிருந்தால் தேற்றரவாளன் உங்களிடத்தில் வரார்; நான்

போவேனேயாகில் அவரை உங்களிடத்திற்கு அனுப்புவேன்" என்றும் குறிப்பிடுகிறார். (யோ 14:16; 16:7) இவ்வசனங்களிலிருந்து பரிசுத்த ஆவியானவர் இவ்வுலகிலுள்ள தம் மக்களோடு என்றென்றும் தங்க வரவேண்டுமானால் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து பரலோகத்துக்கு உயர்த்தப்பட வேண்டுமென்ற ஒரே ஒரு நிபந்தனை தான் உண்டு என்பதை நாம் காணலாம். (யோ 7:39) அதுமாத்திரமல்ல, பரிசுத்த ஆவியானவர் தம் மக்கள் நடுவில் என்றென்றும் தங்க இவ்வுலகத்துக்கு வரும் இடத்தைப் பற்றியும் ஓர் நிபந்தனை உண்டு. "என் பிதா வாக்குத்தத்தம் பண்ணினதை இதோ நான் உங்களுக்கு அனுப்புகிறேன். நீங்களோ உன்னதத்திலிருந்து வரும் பெலனால் தரிப்பிக்கப்படும் வரைக்கும் எருசலேம் நகரத்தில் இருங்கள்" என்று சொன்னார் கிறிஸ்து (லூக்கா 24:49). ஏன் எருசலேம் நகரத்தில் இருக்கச் சொன்னார்? எருசலேம் நகரத்திலிருந்து தான் கர்த்தரின் வசனம் வெளிப்படும் என்ற தீர்க்கதரிசனத்தின் நிறைவேறுதலாக இது அமைய வேண்டுமென்பது தேவனுடைய திட்டமாகும். (ஏசா 2:3, மீகா 4:2) ஆகவே தான் எருசலேமில் காத்திருக்கவேண்டுமென்று சீஷர்களுக்குக் கூறப்பட்டது. எருசலேமில் காத்திருங்கள் என்பது எருசலேமை விட்டு போகாமல் அங்கு இருங்கள் என்றே பொருள்படும். லூக்கா 24:49 அப்.1:5 ஆகிய இரு வசனங்களை ஒத்துப்பார்த்தால் இது விளங்கும்.

இவ்விதமாய் கர்த்தருடைய வாக்கின்படி தீர்க்கதரிசனத்தின் நிறைவேறுதலாக அவர்கள் எருசலேமை விட்டுப்போகாமல் அங்கிருந்த போது பெந்தெகொஸ்தே நாளில் தேவ ஆவியானவர் கிறிஸ்துவின் இரத்தத்தால் சம்பாதிக்கப்பட்ட சபையின் நடுவில் என்றென்றைக்கும் தங்கியிருந்து அவர்கள் இவ்வுலகிலிருந்து மீட்கப்படும் நாள் வரைக்கும் அவர்களைத் தேற்றி பராமரித்து காப்பாற்றும்படி இறங்கினார். (அப்.2ம் அதிகாரம்) அன்று அங்கு கூடி வந்திருந்த சீஷர்கள் அனைவரும் காணத்தக்கதான ஓர் காட்சியும் கேட்கத்தக்கதான ஒரு சத்தமும் பரிசுத்த ஆவியானவரின் பிரசன்னத்தை வெளிப்படுத்திற்று. அங்கு அன்று காற்று வீசவில்லை. ஆனால் அது போல ஒரு முழக்கம் கேட்டது. அக்கினி மயமான நாவுகள் அவர்கள் மேல் அமரவில்லை. அந்த நாவுகளைப் போல பிரிந்திருக்கும் நாவுகள் காணப்பட்டு அவர்கள் ஒவ்வொருவர் மேலும் அமர்ந்தது. கர்த்தருடைய வசனத்தை சரிவர கற்காத காரணத்தால் பெந்தெகோஸ்தே நாளில் அளித்த அக்கினி அபிஷேகத்தை எனக்குத் தாரும் என்று ஜெபிக்கிற அநேகர் உண்டு. இது பற்றிய சில உணர்ச்சிவசப்படுத்தும் பாடல்களும் பாடப்படுகின்றன. அக்கினி அபிஷேகம் என்பது புதிய ஏற்பாட்டு விசுவாசிகளுக்கு புறம்பான ஒரு வார்த்தையேயாகும். கர்த்தர் தமது ஜனங்களை அக்கினியினால் அபிஷேகிக்கிறவருமல்ல, அவர்களுக்கு அக்கினியினால் ஞானஸ்நானம் கொடுக்கிறவருமல்ல. மத். 3:11, 12; லூக்கா 3:16, 17 முதலிய வசனங்களை நன்றாக கவனித்துப் பாருங்கள். ஆண்டவர் இரண்டு காரியங்களைச் செய்கிறார். முதலாவது தூற்றுக் கூடையினால் களத்தை விளக்கி கோதுமையை களஞ்சியத்தில் சேர்க்கிறார். அடுத்தாற்போல் பதரை அவியாத அக்கினியினால் சுட்டெரிக்கிறார். இதில் முதலாவது உள்ளது பரிசுத்த ஆவியானவரின் ஞானஸ்நானமும் அடுத்தது

அக்கினியின் ஞானஸ்நானமுமாகும். விசுவாசிகளுக்கும் அவிசுவாசிகளுக்கும் நடக்கப் போவதைப் பற்றியே கர்த்தர் இதைக் கூறுகிறார்.

விசுவாசிகள் கர்த்தருடைய சமூகத்தில் கூட்டிச் சேர்க்கப்படும்போது பிசாசும், அவன் தூதரும், அவர்களைப் பின்பற்றும் அவிசுவாசிகளும், அக்கினி ஞானஸ்நானமாகிய அக்கினி கடலில் போடப்பட்டு நித்திய காலமாக வாதிக்கப்படப் போகிறார்கள். இதை நாம் தெளிவாய் அறிந்திருத்தல் அவசியமாகும்.

பரிசுத்த ஆவியானவர் பெந்தெகொஸ்தே நாளில் எருசலேமில் யூதர்களாகிய தம் சீஷர்கள் மேல் வந்து இறங்கியபோது, அவர்கள் அனைவரும் அதற்கடையாளமாக தேவனுடைய மகத்துவங்களை பூமியின் நாலா திசைகளிலும் குடியிருந்து அங்கு பெந்தெகொஸ்தே பண்டிகைக்காக கூடி வந்திருந்த யூதர்களும் மற்ற நாட்டினரும் பேசிவந்த அவரவர் ஜென்ம பாஷையிலே பேசலானார்கள். இது கேட்டவர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. தேவனுடைய மகத்துவங்களை அந்தந்த தேசத்தார் பேசின பற்பல அந்நிய பாஷைகளில் பேசிக் கொண்டிருந்தவர்களில் பெரும்பாலானோர் மீன் பிடிக்கும் படிப்பறியாத செம்படவர்கள் தான் என்பது அங்குள்ள மக்கள் அறிந்த விஷயமேயாகும். இந்த அதிசயம் ஏன் நடந்தது? சற்று கவனியுங்கள். அப். 2ம் அதிகாரத்தில் அங்கு கூடி வந்தவர்கள் அனைவரும் யூதமார்க்கத்தில் அமைந்தவர்களாகவே இருந்தார்கள். அவர்கள் அந்நாள் வரை தேவனிடத்திலிருந்து மோசே பெற்றுக் கொடுத்த நியாயப் பிரமாணத்தை கைக்கொண்டு வைராக்கியத்தோடு அனுசரித்து வந்தார்கள். இவர்கள் ஒரே நாளில் எப்படி கிறிஸ்துவை விசுவாசிக்க முடியும்? ஆகவே தான் தேவனுடைய வார்த்தையை உறுதிப்படுத்த இயேசுவின் நாமத்தில் அநேக அற்புத அடையாளங்கள் நிறைவேறப்பட்டன. (மாற்கு 16:20) பாஷை வரமும் அவைகளில் ஒன்றேயாகும். (1 கொரி 12:7-11) பரிசுத்த ஆவியானவர் கிரியை செய்ய அந்த நாளுக்கு அவருக்கு அந்த வரம் தேவைப்பட்டதால் அன்று அதை உபயோகப்படுத்தினார். தேவ ஆவியானவரின் பெலத்தால் அன்று பலத்த கிரியைகளும் நடந்தன. ஏனெனில் "பெந்தெகொஸ்தே" நாளில் சபை உருவாக்கப்பட்டு செயலாற்றப்பட வேண்டும் என்பதில் தேவன் சிரத்தையுள்ளவராக இருந்தார்; அதற்கு காரணமுண்டு.

கர்த்தர் தம் வார்த்தைகள் கிரியைகள் யாவற்றிற்கும் ஆதாரமாக பழைய ஏற்பாட்டிலுள்ள வசனங்களை குறிக்கோள் காட்டி வருவதை வேதத்தில் நாம் காணலாம். அதுபோலவே கர்த்தருடைய பாடு, மரணம், அடக்கம் பண்ணப்படுதல், உயிர்த்தெழுதல், பரமேறுதல், பரிசுத்த ஆவியின் வருகை, யூதர்களின் வருங்காலம், கர்த்தரின் இரண்டாம் வருகை இவை யாவற்றையும் குறித்து பழைய ஏற்பாட்டில் துல்லியமாக எழுதப்பட்டிருப்பதை நாம் காண முடியும். கர்த்தரும் பாடுபட்டு மரித்து உயிர்த்தெழுந்த பின் மோசே முதலிய சகல தீர்க்கதரிசிகளும் எழுதின தேவவாக்கியங்களெல்லாவற்றிலும் தம்மை குறித்துச் சொல்லியவைகளை தம் சீஷருக்கு விவரித்துக் காண்பித்துள்ளார் (லூக்கா 24:26, 27) ஆகவே

கிறிஸ்துவின் வாழ்க்கையில் நடந்த ஒவ்வொன்றும் அனாதியாய் தேவனுடைய பூரண சித்தத்தின் மத்தியிலிருந்து தேவனால் முன் மொழியப்பட்டதாகவே இருந்தன. அப்படிப்பட்டவைகளே லேவியராகமம் 23ம் அதிகாரத்தில் கூறப்பட்டுள்ள ஏழு பண்டிகைகளாகும். இவைகளில் நான்கு பண்டிகைகள் வருட ஆரம்பத்திலும் மூன்று பண்டிகைகள் வருட முடிவிலும் ஆசரிக்கப்பட்டு வந்தன. இப்படியாக இவைகளில் முந்தின நான்கு பண்டிகைகள் ஏற்கெனவே கிறிஸ்துவின் வாழ்க்கையில் வந்து முடிந்தவைகளையும் பிந்தின மூன்று பண்டிகைகளும் இனி இவ்வுலகில் நடைபெறப்போகும் நிகழ்ச்சிகளையும் குறிக்கின்றன.

முதலாவது பஸ்கா பண்டிகை (லேவி. 23:5) இது கிறிஸ்துவின் மரணத்தைக் குறிக்கிறது. (1 கொரி 5:7) இரண்டாவது புளிப்பில்லாத அப்பப்பண்டிகை (லேவி. 23:6) இது கிறிஸ்துவின் அடக்கம் பண்ணுதலைக் குறிக்கிறது. மூன்றாவது முதற்பலனை அசைவாட்டும் பண்டிகை (லேவி 23 10 11). முதற்பலனாகிய கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலை இது காட்டுகிறது. (1 கொரி. 15:20) இந்த கதிர் கட்டு ஓய்வு நாளுக்கு மறு நாளிலே தேவனுடைய சந்நிதியில் அசைவாட்டப்பட வேண்டுமென குறிப்பிட்டிருப்பதைப் பாருங்கள். ஓய்வு நாளுக்கு மறுநாள் தான் வாரத்தின் முதல் நாள். கிறிஸ்து உயிர்த்தெழுந்ததும் இந்த தேவ நியமத்தின்படி வாரத்தின் முதல் நாளிலேயாகும்.

அடுத்த பண்டிகை பெந்தெகொஸ்தே பண்டிகை (லேவி. 23:16) பெந்தெகொஸ்தே என்றால் "ஐம்பதாவது நாள்" என்று தான் அர்த்தம். லேவி. 23:15, 16 வசனங்களை கவனமாக படித்து பாருங்கள். அதாவது கிறிஸ்து உயிர்த்தெழுந்த நாளிலிருந்து ஐம்பதாவது நாள் பெந்தெகொஸ்தே நாள். இந்த நாளில் இரண்டு அப்பங்கள் கர்த்தருக்கென்று முதற்பலனாகக் கொண்டு வரப்பட வேண்டியிருந்தது. சபை தேவனுக்காக கொண்டு வரப்பட்ட நாளே இது. (எபி. 12:23) இரண்டு அப்பங்கள் யூதரையும் புறஜாதிகளையும் குறிக்கிறது. (எபே. 2:13-18)இந்த இரு திறத்தாரும் ஒரே ஆவியினாலே பிதாவினிடத்தில் சேரும் சிலாக்கியத்தை கிறிஸ்துவின் மூலமாக பெற்ற நாளே இந்த பெந்தெகொஸ்தே நாளாகும். அன்று தம் ஜனங்களின் மத்தியில் பரலோகத்தில் இருந்து தம் தலைமை ஸ்தாபனத்தை மாற்றி வந்த பரிசுத்த ஆவியானவர் அன்றிலிருந்து நித்தியத்துக்குமாய் அவர்கள் மத்தியில் இருக்கிறவராகவே காணப்படுகிறார். இவ்விதமாய் பழைய ஏற்பாடு புதிய ஏற்பாட்டின் நிழலாக இருக்கிறது என்பது எவ்வளவு தெளிவாக விளங்குகிறது பாருங்கள்

இவ்விதமான நிலையில் அந்நாளிலே வெளியரங்கமான அடையாளங்களோடு தம் பிரசன்னத்தையும் தம் வசனத்தையும் தம் மக்கள் மத்தியில் வெளிப்படுத்தின பரிசுத்த ஆவியானவர் தம் ஜனங்களை கிறிஸ்துவாகிய மணவாளனிடம் சேர்க்கும் வரை அவர்களோடிருந்து அவர்களை வழிநடத்துகிறவராக இருக்கிறார். (யோ. 16:13, எபே. 1:14, ரோமர். 8:26,27, யூதா 24, 25) இந்த பரிசுத்த ஆவியானவருக்காக நாம் ஆண்டவரைத் துதிப்போமாக (அப். 2:33).

## 2

# பரிசுத்த ஆவியானவரின் பிரசன்னம்

பரிசுத்த வேத வாக்கியங்களில் முன் மொழியப்பட்ட படியே கர்த்தருக்கென்று முதற்பலனாகக் கொண்டு வரப்பட்ட இரண்டு அப்பங்களைக் காட்டும் யூதர் புற ஜாதியார் ஆகியவர்களாலான சபை ஸ்தாபிக்கப்பட்ட நாள் பெந்தெகொஸ்தே நாள் என அழைக்கப்படும் ஐம்பதாவது நாளாகவே இருந்தது என கண்டோம் (லேவி 23:15-21). அது சபை கூடி வரும் பரிசுத்த நாளாகும். இவ்வுலகில் தம் சபையை ஸ்தாபிக்கும்படி தேவனுடைய வலது பாரிசத்துக்கு உயர்த்தப்பட்டுள்ள கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினால் அனுப்பப்பட்டுள்ள பரிசுத்த ஆவியானவர் தம் தலைமை ஸ்தாபனத்தை பூலோகத்துக்கு தம் மக்கள் நடுவில் என்றென்றும் தங்க மாற்றிக் கொண்ட நாளே அது (யோவான் 14:16; அப். 2:1,2). அந்நாளிலிருந்து கர்த்தருடைய இரண்டாம் வருகையில் சபை எடுத்துக்கொள்ளப்படும் நாள் வரைக்கும் சபையோடிருந்து அதைத் தேற்றி ஆறுதல்படுத்தி, வழிநடத்தி சபையின் மணவாளனின் அழகையும் மகிமையும் அவ்வப்பொழுது சபைக்கு கூறி அதை உற்சாகப்படுத்தி பாதுகாத்து கற்புள்ள கன்னிகையாக அதை கிறிஸ்துவுக்கு முன் நிறுத்தும்படியான உத்திரவாதம் பரிசுத்த ஆவியானவருடைய தாகும்.(யோவான் 16:13, 14, ரோமர் 8:9, 14, 16)

பெந்தெகொஸ்தே நாளில் பரிசுத்த ஆவியானவர் இவ்வுலகில் தம் மக்களோடு என்றென்றும் தங்கும்படி அனுப்பப்பட்டிருந்தாலும் அவருடைய கிரியைகள் பல தரப்பட்டவைகளாயிருந்தன. அவைகளில் முக்கியமானதும் முதலாவதானதும் இவ்வுலகிலுள்ள விசுவாசிகளை சபையாக ஒரே சரீரமாக ஒன்றுபடுத்திக் காட்டுவதேயாகும்.

அப்போஸ்தலர் காலத்தில் மத சம்மந்தமாக கீழ்கண்ட நான்கு முக்கிய பிரிவினர்கள் இருந்தனர் :

1. யூதர்கள்
2. புற ஜாதிகள்
3. சமாரியர்
4. யோவானுடைய சீஷர்

இந்த நான்கு வகுப்பாரும் எவ்வித ஏற்ற தாழ்வுகளும் இல்லாமல் கிறிஸ்துவின் சபையில் சேர்க்கப்பட்டார்கள் என்பதை பரிசுத்த ஆவியானவர் நிருபிக்க வேண்டியிருந்தது. ஏனெனில் அதற்கு முன் புறஜாதிகள் இஸ்ரவேலின் காணியாட்சிக்கு புறம்பானவர்களாக இருந்ததால் அவர்களுக்கும் இஸ்ரவேலருக்கும் எவ்வித ஆவிக்குரிய சம்பந்தமும் இருக்கவில்லை. (எபே. 2:12) அதேபோல சமாரியரோடு யூதர்கள் கலவுகிறதில்லை. அவர்கள் யூதர்களால் அற்பமாக எண்ணப்பட்டார்கள். ஆகவேதான் கிறிஸ்துவை சமாரியப் பெண், நீர் யூதனாயிருக்க சமாரிய

ஸ்திரியாகிய என்னிடத்தில் தாகத்துக்கு தா என்று எப்படி கேட்கலாம் என்றாள். (யோவான் 4:9) யோவானுடைய சீஷர்கள் யோவான் கொடுத்த மனந்திரும்புதலுக்கேதுவான ஞானஸ்நானத்தை மாத்திரம் பெற்றவர்களாய் பரிசுத்த ஆவி உண்டென்ற சத்தியத்தையே அறியாதவர் களாயிருந்தார்கள். (அப் 19:2). ஆகவே இந்த நான்கு வகுப்பாரும் ஒரே ஆவிக்குள்ளாக தாகந்தீர்க்கப்பட்டார்கள் என்பதை வெளியரங்கமான முறையில் எடுத்துக் காட்ட இந்த நான்கு வகுப்பாரும் இயேசு கிறிஸ்துவை புதிய ஏற்பாட்டு சத்தியத்தின்படி தங்கள் பாவநாசகராகவும் இரட்சகராகவும், கர்த்தராகவும் ஏற்றுக் கொண்ட முதல் சந்தர்ப்பங்களில் ஆவியானவர் வெளியரங்கமான அடையாளங்களோடு அவர்களை சபையில் சேர்த்தார்.

யூதர்கள் சபையில் சேர்க்கப்பட்டபோது நடந்த சம்பவத்தை அப். 2ம் அதிகாரத்திலும் புறஜாதிகள் சேர்க்கப்பட்டதை அப். 10ம் அதிகாரத்திலும் சமாரியர் சேர்க்கப்பட்டதை அப். 8ம் அதிகாரத்திலும் யோவானுடைய சீஷர் சேர்க்கப்பட்டதை அப். 19ம் அதிகாரத்திலும் நாம் காணலாம். புறஜாதிகள் சபையில் சேர்க்கப்பட்டபோது வெளியரங்கமான அடையாளம் காணப்பட்டிருக்காவிடில் அவர்களை ஒருபோதும் யூதர் தங்கள் நடுவில் சேர்த்துக் கொண்டிருக்க மாட்டார்கள். புறஜாதிகளிடத்தில் போய் அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்து வந்த பேதுரு அப். 11ம் அதிகாரத்தில் யூதர்களிடமிருந்து வந்த பலத்த எதிர்ப்புக்குள்ளாகின்றான். அப்பொழுது அவன் அங்கு நடந்த காரியங்களை விளக்கி, கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்திருக்கிற நமக்கு தேவன் வரத்தை அனுக்கிரகம் பண்ணினது போல அவர்களுக்கும் அவ்வரத்தை அனுக்கிரகம் பண்ணியிருக்கும் போது தேவனைத் தடுக்கிறதற்கு நான் எம்மாத்திரம் என்றான். இவைகளை அவர்கள் கேட்டபோது தான் அமர்ந்தார்கள் (அப்.11:18). இவ்விதமாக பரிசுத்த ஆவியானவர் இந்த நான்கு இடங்களில் தான் ஒரு குறிப்பிட்ட நோக்கத்தோடு வெளியரங்கமான அடையாளங்களைக் கொடுத்தாரேயல்லாமல், மக்கள் இரட்சிக்கப்பட்டு சபையில் சேர்க்கப்பட்ட வேறு எந்த இடங்களிலும் இப்படிபட்ட வெளியரங்கமான அடையாளங்களைப் பற்றி நாம் வாசிக்கிறதில்லை.

ஆகவே பரிசுத்த ஆவியானவரின் பிரசன்னத்துக்கு எல்லா இடங்களிலும் வெளியரங்கமான அடையாளங்களை எதிர்பார்ப்பது வசனத்தின்படி சரியல்ல. பெந்தெகொஸ்தே நாளில் இருதயத்தில் குத்தப்பட்டு மனந்திரும்பின 3000 பேரும் அப் 4ம் அதிகாரத்தில் வசனத்தைக் கேட்டு விசுவாசித்த 5000 பேரும் அப் 5ம் அதிகாரத்தில் விசுவாசமுள்ளவர்களாகி கர்த்தரிடம் சேர்க்கப்பட்ட திரளான புருஷரும் ஸ்திரிகளும், மற்றும் நாம் அப்போஸ்தலர் நடபடிகளில் வாசிக்கும் இரட்சிக்கப்பட்ட பலரும் தங்கள் வாழ்க்கையிலுள்ள பரிசுத்த ஆவியான வரின் பிரசன்னத்துக்கு வெளியரங்கமான அடையாளம் உடையவர்களாக இருந்தார்கள் என நாம் வாசிக்கிறதில்லை. விசுவாசத்தினாலே பிழைக் கிறோம். விசுவாசத்தினாலேயே ஆவியைப் பெறுகிறோம் (கலா. 3:2, 11).

அதுமாத்திரமல்ல பரிசுத்த ஆவியானவர் வெளியரங்கமான அடையாளத்தைக் கொடுத்த சந்தர்ப்பங்களிலெல்லாம், அந்தந்த இடங்களில் கூடியிருந்த விசுவாசிகள் அனைவரும் வெளியரங்கமான அடையாளம் பெற்றார்கள். சிலர் அந்நிய பாஷை பேசியும் சிலர் பேசாமலும் இருக்கவில்லை. அது அவர்களுடைய சாமர்த்தியத்தினாலும், உபவாசத்தினாலும், ஒடுக்கத்தினாலும், முயற்சியினாலும் பெற்றுக் கொள்ளப்பட்டதாகவும் இல்லை. ஆகவே சபை பிறந்த அக்காலத்திலிருந்து இந்த நான்கு வகுப்பாரும் எவ்வித வேற்றுமையுமின்றி சபையாக அங்கீகரிக்கப்பட்டுள்ளார்கள் என்பதை மற்றவர்களுக்கு காட்டவே அவர்களில் வெளியரங்கமான அடையாளம் காணப்பட்டது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். பெந்தெகொஸ்தே நாளன்று இவ்வுலகுக்கு தலைமை ஸ்தாபனத்தை மாற்றி வந்த பரிசுத்த ஆவியானவர் கடந்த இருபது நூற்றாண்டுகளாக தம் மக்கள் நடுவில் தங்கி வருகிறார். பழைய ஏற்பாட்டின் காலத்தில் நான் உங்களை நிர்மூலம் பண்ணாதபடி நான் உங்கள் நடுவில் செல்லமாட்டேன் எனக்கூறி பாளையத்துக்குப் புறம்பே தூரத்திலே போடப்பட்ட ஆசரிப்புக் கூடாரத்தில் தங்கி இஸ்ரவேல் மக்களோடு பிரயாணம் பண்ணின தேவன் (யாத். 33:3,7) இன்று கிறிஸ்துவின் இரத்தத்தால் மீட்கப்பட்ட தம் ஜனத்தின் நடுவில் அவர்களோடு என்றென்றும் தங்கியிருக்கிறவராயிருக்கிறார் என்று அறிவது தேவன் நமக்கு பாராட்டின மாபெரும் கிருபையேயாகும் (மத். 18:20, யோவா 14:16, எபி. 18:5). ஆகவே விசுவாசிகளாகிய நாம் பரிசுத்த ஆவியானவரின் பிரசன்னத்தை நம் வாழ்க்கையில் உணர்ந்தவர்களாக அவருக்குத் துக்கத்தைக் கொடாமல், அவருக்கு நம் வாழ்க்கையின் எல்லா எல்லைகளிலும் நிறைந்திருக்க அனுமதி கொடுத்து மெய் இன்பத்துடன் முன்னேறிப் போவோமாக (எபே. 4:30, 5:18).

பரிசுத்த ஆவியானவர் நாம் மீட்கப்படும் நாளுக்கென்று முத்திரையாகவும் அச்சாரமாகவும் கொடுக்கப்பட்டவராகவே நமக்குள் வாசம் பண்ணுகிறார் (எபே. 1:13, 14). ஒருவன் பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ள வேதம் கொடுக்கும் நிபந்தனை என்ன? வேதம் இது பற்றி மிகவும் தெளிவாகக் கூறுகிறது. பவுல் கலாத்தியா நாட்டிலுள்ள விசுவாசிகளுக்கு எழுதும்போது "நீங்களெல்லாரும் கிறிஸ்து இயேசுவைப் பற்றும் விசுவாசத்தினால் தேவனுடைய புத்திரராயிருக்கிறீர்கள். மேலும் நீங்கள் புத்திரராயிருக்கிற படியினால், அப்பா பிதாவே என்று கூப்பிடத்தக்கதாகத் தேவன் தமது குமாரனுடைய ஆவியை உங்கள் இருதயங்களில் அனுப்பினார்" (கலா. 3:26;4:6) எனக் கூறுகிறார். இதிலிருந்து நாம் என்ன அறிகிறோம்? தேவ குமாரனின் ஆவியை ஒருவன் பெறுவதற்கு அவனுக்கு அளிக்கப்படும் ஒரே நிபந்தனை அவன் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினாலே தேவனுடைய பிள்ளையாயிருக்க வேண்டும். சகோதர சகோதரியே எத்தனை விசுவாசிகள் கர்த்தரை உண்மையாய் தங்கள் இரட்சகராக ஏற்றுக் கொண்டு, பாவ மன்னிப்பின் நிச்சயம் பெற்றும்

தன்னுள்ளில் தேவன் வாசம் பண்ணுகிறார் என்பதை அறிந்தும் பழைய புதிய வாழ்க்கைக்குரிய மாற்றத்தை உடையவர்களாயிருந்தும் தங்களுக்கு இன்னும் வெளியரங்கமான அடையாளம் கிடைக்கவில்லையே என அங்கலாய்ப்போடும் ஏக்கத்தோடும் வேதனையோடும் நாட்களை கடத்தி வருகிறார்கள். அவர்களுக்குள் பரிசுத்த ஆவியானவர் இருந்தும் அந்த சத்தியத்தை அவர்கள் வேத வசனத்தின் வெளிச்சத்தில் எளிதாக ஏற்றுக் கொள்ளாமல், மனுஷ போதகங்களுக்கும் உணர்ச்சிகளுக்கும் இடங்கொடுத்து கர்த்தர் தங்களுக்கு கொடுத்துள்ள நாட்களை அறிவீனமாக போக்கடிக்கிறார்கள்.

தேவனுடைய பிள்ளையே, நீ தேவனுடைய ஆலயமென்றும் தேவனுடைய ஆவி உன்னில் வாசம் பண்ணுகிறார் என்றும் தேவனுடைய ஆவி இல்லாதவன் அவருடையவனே அல்ல என்றும் கூறும் வேத வசனங்களை பரிபூரணமாய் நம்பி விசுவாசி. (1 கொரி. 6:19 ரோமர் 8:9) அப்போது பரிசுத்த ஆவியானவரின் பிரசன்னத்தை உன் வாழ்க்கையில் சம்பூரணமாய் அனுபவிப்பாய். இரட்சிக்கப்பட்டோமென்று கூறியும் இரட்சிப்பின் நிச்சயமில்லாமலும், பரிசுத்த ஆவியானவரின் பிரசன்னத்தையும் அனுபவியாமல் வாழும் மக்கள் அவிசுவாசிகளேயாவர். அடுத்த அத்தியாயம் இதை விளக்குகிறது.

# 3

# சுவிசேஷத்தினால் அருளப்படும் பரிசுத்த ஆவி

இச்சந்தர்ப்பத்தில் ஓர் முக்கியமான சத்தியத்தை இங்கு கூறாமல் இருக்கமுடியாது எல்லாரும் இரட்சிக்கப்படுவது தேவசித்தம்; தெரிந்து கொள்ளப்பட்டு அழைப்பு அருளப்படுவது தேவகிருபை. தேவன் எவர்களை ஆதியில் முன்னறிந்துள்ளாரோ அவர்கள் மாத்திரமே இரட்சிக்கப் படுவார்கள். ரோமர் 8:28 - 30, யோவான் 6:44, 2 தெச. 2:13, 2 தீமோ. 1:9, கொரி. 1:18, 21 முதலிய வசனங்களைக் கருத்தாய் வாசித்தால் இது விளங்கும். இவ்விதமாய் தேவனால் முன்னறியப்பட்டவர்கள் மாத்திரமே சுவிசேஷத்தினாலே இரட்சிப்புக்கு அழைக்கப்படுகிறார்கள். (2 தெச. 2:14) சுவிசேஷம் என்ற பதத்துக்கும் நற்செய்தி என்ற பதத்துக்கும் வித்தியாசம் உண்டு. சுவிசேஷத்தை திருநற்செய்தி என கூறலாம். வேத மொழியில் கூற வேண்டுமானால் 'சிலுவையைப் பற்றிய உபதேசம்' என கூறலாம். இது கெட்டுப் போகிறவர்களுக்கு அதாவது தேவனால் முன் தெரிந்துக் கொள்ளப்படாமலிருக்கிறவர்களுக்கு பைத்தியமாயிருக்கிறது. இரட்சிக்கப் படுகிறவர்களுக்கோ அது தேவ பெலனாயிருக்கிறது. (1 கொரி 1:18). இந்தியா தேசத்திலுள்ள ஒரு நபர் 20 நூற்றாண்டுகளுக்கு முன் பாலஸ்தீன நாட்டிலே பிறந்து வாழ்ந்து இரத்தம் சிந்தி மரித்து உயிரோடெழுந்த ஒருவரை தன் மீட்புக்காக விசுவாசித்து தன் இருதயத்தில் இரட்சகராக ஏற்றுக் கொண்டால் அவனுக்கு பாவ மன்னிப்பு கிடைக்கும் என்றால் உலக மனிதனுக்கு அது பைத்தியமாகவே இருக்கும். ஆனால் ஒருவன் தேவனால் முன் தெரிந்து கொள்ளப்பட்டவனானால் அவனுக்கு இந்த சுவிசேஷமாகிய சிலுவையைப்பற்றிய உபதேசம் தேவ பெலனாகிறது. ஏனெனில் இந்த சுவிசேஷத்தை ஒரு நபர் ஏற்றுக்கொள்ளும்போது சுவிசேஷத்தோடு அவன் வல்லமை, பரிசுத்த ஆவி, முழு நிச்சயம் ஆகியவைகளையும் பெற்றுக் கொள்கிறான். (எபே 1:13, 14; 1 தெச 1:5). எந்த க்ஷணத்திலே அவன் சுவிசேஷத்தை ஏற்றுக் கொள்கிறானோ அந்த க்ஷணத்திலேயே அவனுக்கு பாவத்தை மேற்கொள்ளக்கூடிய வல்லமை கிடைக்கிறது. பரிசுத்த ஆவியானவர் அவனில் தங்குவதால் ஏற்படும் பரலோக சந்தோஷம் அவனை அறியாமல் அவனை நிரப்புகிறது; தான் தேவனுடைய பிள்ளை என்றும் இன்று மரித்தாலும் தான் பரலோகம் போக ஏதுவுள்ளவன் என்றும் நிச்சயம் கிடைக்கிறது. இது என்ன மகிமையான அனுபவம் இதெல்லாம் ஒருவனுக்கு அருளப்படுவதற்குக் காரணம் தேவ கிருபையேயாகும். விசுவாசிகளாகிய நாம் இதற்காக கர்த்தருக்கு எத்தனை நன்றியளித்துள்ளவர்களாக இருக்க வேண்டும்.

நற்செய்தியை எல்லாரும் ஏற்றுக்கொள்வார்கள்; ஆனால் சுவிசேஷத்தை தேவனால் முன் தெரிந்துகொள்ளப்பட்டவர்கள் மாத்திரமே

ஏற்றுக்கொள்வார்கள். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நற்செய்தி எல்லாருக்கும் இனிமையாகவே இருக்கும். அவரது பிறப்பு, அற்புத அடையாளங்கள், அவருடைய அன்பு, அவரது நற்கிரியைகள் அனைத்தையும் நாம் எத்தனை விவரித்தாலும் அவைகளை மிகுந்த மகிழ்ச்சியோடு அனைவரும் கேட்பார்கள். ஆனால் அவரது சிலுவை பாடுகளையும், இரத்தம் சிந்துதலையும், மரணத்தையும் அதோடுள்ள சம்பவங்களையும் கூறும்போது உலக மனிதன் ஏற்றுக் கொள்ளமாட்டான். அவன் தேவனால் தெரிந்து கொள்ளப்படாததினாலே அவைகளெல்லாம் அவனுக்கு பைத்தியமாகவே இருக்கும். அது மாத்திரமல்ல, கர்த்தரின் நற்செய்தியை மாத்திரம் கேட்டு அவர் நாமத்தில் செய்யப்படும் அற்புத அடையாளங்களினால் கவரப்பட்டு மாம்சத்தின் தூண்டுதலினால் இரட்சிக்கப்பட்டதாக அறிவிக்கிறவர்களுக்கு சுவிசேஷம் கொடுக்கும் வல்லமையும் பரிசுத்த ஆவியும் இரட்சிப்பின் நிச்சயமும் கிடைக்கிற தில்லை. அப்படிப்பட்டவர்கள் தாங்கள் இரட்சிக்கப்பட்டு ஞானஸ்நானம் பெற்று பெரிய அனுபவங்களைப் பெற்றிருக்கிறோமென அறிக்கை செய்தாலும் இன்று நீங்கள் மரித்தால் கர்த்தரோடு பரலோகில் இருப்பீர்களா என கேட்டால் அதை எப்படி நிச்சயமாய் கூறமுடியும் என சொல்லுவார்கள். இரட்சிப்பை இழந்து போகலாம் எனவும் கூறுவார்கள்.

தேவன்தாம் இவ்வுலகில் எவர்களை முன் தெரிந்து கொண்டாரென வெளிப்படையாக தெரியப்படுத்தியிருப்பாரென்றால் அப்படிப்பட்டவர் களுக்கு மாத்திரம் நாம் சுவிசேஷம் அறிவித்தால் போதும்; ஆனால் நமக்கோ தேவன் தம் அநந்த ஞானத்தில் அதை வெளிப்படுத்தவில்லை. அவருடைய மக்களாகிய நமக்கோ உலகமெங்கும் போய் சர்வசிருஷ்டிக்கும் சுவிசேஷத்தை அறிவிக்கும் பொறுப்பே கொடுக்கப்பட்டுள்ளது. உலகில் சில பிள்ளைகள் கோடீஸ்வரர் வீட்டில் பிறக்கிறது. சில பிள்ளைகள் நடுத்தர மக்கள் வீட்டில் பிறக்கிறது. சில பிள்ளைகள் ஏழைகள் வீட்டில் பிறக்கிறது. சில பிள்ளைகள் பிச்சைக்காரர் வீட்டில் பிறக்கிறது. பிறக்கவைப்பது தேவ சித்தம். அவரை கேள்வி கேட்க ஒருவரும் இல்லை. ஏசாவை வெறுத்து ஏன் யாக்கோபை சிநேகித்தார் என எவரும் அவரை கேள்வி கேட்க முடியாது. அவ்விதமே கர்த்தருடைய பிள்ளைகளாக நம்மை அவரது குடும்பத்தில் பிறக்கச் செய்து தம்முடைய குமாரனோடு உடன் சுதந்தரராகும் படியான நிலைமையில் வைத்து ஆதரித்து நமக்கென ஓர் மகிமையின் வருங்காலத்தை ஆயத்தப்படுத்திக்கொடுத்தது தேவகிருபையே. இதற்காக தேவனுக்கு நம் வாழ்நாள் முழுவதும் நன்றியுள்ளவர்களாகவும் அவருக்கு பிரியமானவர்களாகவும் வாழ்ந்து நம் ஓட்டத்தை கர்த்தரில் மனமகிழ்ச்சி யோடு முடிக்க கடமைப்பட்டுள்ளோம்.

இவ்விதமாய் சுவிசேஷத்தின் மூலம் அச்சாரமாக நாம் பெற்றுக் கொண்ட பரிசுத்த ஆவியானவரை துக்கப்படுத்தாமல் நம் வாழ்க்கையின் எல்லா பகுதிகளையும் அவருக்கு பூரணமாக ஒப்புக் கொடுத்து ஆவியினால் நிறைந்து வாழும் வாழ்க்கையை உடையவர்களாயிருத்தல் அவசியம்.

(எபே.1: 13,14: 4:30: 5:18 - 21) அப்படிப்பட்டவர்களே ஆவிக்குரிய விசுவாசிகள் என அழைக்கப்படுகிறார்கள். அவர்கள் ஆவியின் கனி கொடுக்கிறவர்களாக, கிறிஸ்துவை மகிமைப்படுத்துபவர்களாக, பரிசுத்த ஆவியானவரால் எழுதப்பட்டுள்ள வேத வசனத்துக்கேற்ப தனிப்பட்ட குடும்ப, சபை வாழ்க்கையை வாழுகிறவர்களாக இருப்பார்கள். (கலா. 5:22,33: யோவான். 16:13,14: அப். 1:8: I யோ. 3:24) இந்த கிருபையை தேவன் தாமே நம் ஒவ்வொருவருக்கும் அருளுவாராக.

# ஆவியின் அபிஷேகம்

இப்போதனையைப் பற்றி கிறிஸ்தவர்கள் நடுவில் அதிக அளவில் பேசப்படும் ஒரு காலத்திலேயே நாம் வாழ்கிறோம். "அபிஷேகம்" என்ற வார்த்தையைக் கேட்டவுடனேயே இது கிறிஸ்தவ சபையின் ஒரு பிரிவினருக்கு மாத்திரமே உரியது என அபிப்பிராயப்படுகிறவர்கள் உண்டு. இதைப் பற்றியே பேசாதே எனக் கூறி வரும் தீவிரவாதிகளும் உண்டு. விசுவாசிகள் அனைவரும் எப்படியாவது பிரயாசப்பட்டு ஆவியின் அபிஷேகத்தைப் பெற்றே ஆக வேண்டும் என முழங்குபவர்களும் உண்டு. இவைகளனைத்தின் நடுவிலும், கர்த்தருடைய பரிசுத்த வசனத்தில் இப்போதனையைப்பற்றி கூறப்படும் உண்மை என்ன என்பதை ஜெப சிந்தனையோடு கர்த்தருடைய சமூகத்தில் ஆராய்ந்து பார்ப்பது மிகுந்த நன்மை பயக்கும்.

"அபிஷேகம்" என்ற வார்த்தை புதிய ஏற்பாட்டில் 6 இடங்களில் மாத்திரமே கூறப்பட்டுள்ளது. அவ்வசனங்களை அப்படியே இங்கு வாசிப்பது நன்மை பயக்கும்.

1. லூக்கா 4:18 "கர்த்தருடைய ஆவியானவர் என் மேலிருக்கிறார். தரித்திரருக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படி என்னை அபிஷேகம் பண்ணினார்".
2. அப். 4:28 "ஏரோதும் பொந்தியு பிலாத்தும் புறஜாதிகளோடும் இஸ்ரவேல் ஜனங்களோடும் கூட நீர் அபிஷேகம் பண்ணின உம்முடைய பரிசுத்த பிள்ளையாகிய இயேசுவுக்கு விரோதமாய் மெய்யாகவே கூட்டங்கூடினார்கள்".
3. அப். 10:38 "நசரேயனாகிய இயேசுவை தேவன் பரிசுத்த ஆவியினாலும் வல்லமையினாலும் அபிஷேகம் பண்ணினார்".
4. 2 கொரி. 1:21 "உங்களோடே கூட எங்களையும் கிறிஸ்துவுக்குள் ஸ்திரப்படுத்தி நம்மை அபிஷேகம் பண்ணினவர் தேவனே".
5. 1 யோவான் 2:20 "நீங்கள் பரிசுத்தராலே அபிஷேகம் பெற்று சகலத்தையும் அறிந்திருக்கிறீர்கள்".
6. 1 யோவான் 2:27 "நீங்கள் அவராலே பெற்ற அபிஷேகம் உங்களில் நிலைத்திருக்கிறது".

இவ்வசனங்களை நாம் கருத்தாய்ப்படித்தால் முதலில் கூறப்பட்டுள்ள 3 வசனங்களிலிருந்து கிறிஸ்துவானவர் தேவனால் அபிஷேகம் பண்ணப்பட்டவர் என்றும் நான்காவது வசனத்திலிருந்து விசுவாசிகள் கிறிஸ்துவுக்குள் தேவனால் அபிஷேகம் பண்ணப்பட்டார்களென்றும் ஐந்தாவது ஆறாவது வசனங்களிலிருந்து கிறிஸ்துவினால் விசுவாசிகள் அபிஷேகம் பெற்றுள்ளார்கள் எனவும் விளங்குகிறது.

மொத்தமாக இவைகளைப் பார்த்தால் தேவன் கிறிஸ்துவை அபிஷேகம் பண்ணினதினால் அவருக்குள் விசுவாசிகளாகிய நாம் அனைவரும் அவரால் அபிஷேகத்தைப் பெறுகிறோம் என அறியலாம்.

தேவன் புதிய ஏற்பாட்டில் நடப்பிக்கும் ஒவ்வொரு கிரியையையும் பழைய ஏற்பாட்டில் நிழலாக நடத்திக் காண்பித்தவராகவே இருக்கிறார். பழைய ஏற்பாட்டின் நிழலே புதிய ஏற்பாட்டின் பொருளாகிறது. அபிஷேகத்தைப் பொருத்தமட்டிலும் கூட பழைய ஏற்பாடு இப்போதனையை மிகவும் தெளிவாக விளக்குகிறது. அதை சிந்திப்போம்.

ஆரோனும் அவன் குமாரரும் ஆசாரிய ஊழியத்துக்காக அபிஷேகம் செய்யப்பட வேண்டுமென்ற கட்டளை யாத். 29ம் அதிகாரத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. இது சம்மந்தமாக வசனம் 7ல் "அபிஷேக தைலத்தையும் எடுத்து அவன் தலையின் மேல் வார்த்து அவனை அபிஷேகம் செய்வாயாக" என தேவன் கூறியதாக வாசிக்கிறோம். லேவி. 21ம் அதிகாரத்தில் தேவன் ஆசாரியர்களின் பரிசுத்தத்தைப் பற்றி கட்டளை கொடுக்கும்போது வசனம் 10ல் "தன் சகோதரருக்குள்ளே பிரதான ஆசாரியனாகத் தன் சிரசில் அபிஷேக தைலம் வார்க்கப்பட்டவன்" என்று கூறுகிறார். யாத். 30:31ல் ஆசாரியனின் தலையில் வார்க்கப்பட்ட இந்த அபிஷேகத் தைலத்தை பற்றி குறிப்பிடும்போது மிகவும் தெளிவாக "இது மனிதனுடைய சரீரத்தின் மேல் வார்க்கப்படலாகாது" என தேவன் கூறுவதை நாம் காணலாம். ஆகவே தலையில் வார்க்கப்படும் அபிஷேக தைலத்தை சரீரத்தில் வார்க்க பிரமாணம் இடம் கொடுக்கவில்லை. ஆனால் மோசே ஆரோனையும் அவன் குமாரனையும் ஊழியத்துக்காக பரிசுத்தம் பண்ணும்போது ஆரோன் மேலும் அவன் குமாரர் மேலும் அவர்கள் வஸ்திரங்கள் மேலும் அபிஷேக தைலத்தைத் தெளித்து பரிசுத்தப் படுத்தினான் என லேவி. 8:30ல் வாசிக்கிறோம். இதிலிருந்து ஒரு ஆசாரியன் அபிஷேகம் செய்யப்பட வேண்டுமானால் அவன் தலையில் அபிஷேக தைலம் வார்க்கப்பட வேண்டுமென்றும், அவனை ஊழியத்துக்காகப் பரிசுத்தப்படுத்த வேண்டுமானால், அவன் சரீரத்திலும் வஸ்திரங்களிலும் அபிஷேக தைலம் தெளிக்கப்பட வேண்டும் என்றும் இஸ்ரவேல் மக்கள் தேவனால் கட்டளை பெற்றிருந்தார்கள். அபிஷேகம் பண்ணப்பட அபிஷேக தைலம் சிரசில் வார்க்கப்பட்டது. பரிசுத்தம் செய்யப்பட்ட அது சரீரத்தில் தெளிக்கப்பட்டது. ஆங்கிலத்தில் "Pouring for anointing; sprinkling for sanctification" என வாசிக்கிறோம்.

புதிய எற்பாட்டுக்கு வரும்போது கிறிஸ்துவே சபையின் தலையாயிருக்கிறார். இந்நிலையில் சபையின் தலையில் தான் அபிஷேக தைலம் வார்க்கப்பட வேண்டும். ஆகவே கிறிஸ்துவை தேவன் அபிஷேகம் பண்ணினார் என்பதை ஆரம்பத்தில் கண்டோம். அவருக்குள் அவரின் அவையவங்களாயிருக்கிற அவரின் சபை அவரால் அந்த அபிஷேகத்தைப்

பெற்றுக் கொள்கிறது என்பது எவ்வளவு தெளிவாக காணப்படுகிறது பாருங்கள். சரீரமாகிய சபையின் மேல் நேராக அபிஷேக தைலமாகிய பரிசுத்த ஆவியானவர் வார்க்கப்படுகிறதில்லை. கிறிஸ்துவுக்குள்ளேயே கிறிஸ்துவினாலே அந்த அபிஷேகத்தை சபை பெறுகிறது. அநேக விசுவாசிகள் இந்த சத்தியத்தை அறியாது என்னை அபிஷேகியும் என்னை அபிஷேகியும் என்று விண்ணப்பித்த வண்ணம், அநேக நாள் உபவாசித்து காத்திருந்து தங்கள் சரீரங்களை ஒடுக்கி, தங்கள் சொந்த பிரயாசத்தினாலே அந்த அபிஷேகம் தங்களில் வார்க்கப்பட விரும்புகிறார்கள். ஆனால் கிறிஸ்துவை அவர்கள் இரட்சகராக ஏற்றுக்கொண்ட அன்றே அவர்கள் கிறிஸ்துவுக்குள் அந்த அபிஷேகத்தைப் பெற்றுள்ளார்கள் என்பதை அறியாமலிருக்கிறார்கள். எபேசி. 1:13, 14 வசனங்கள் போதிக்கிற சத்தியமும் இதுதான்.

இன்றைய விசுவாசிகளின் தேவை ஆவியானவரின் அபிஷேக மல்ல. ஏனெனில் அவர்கள் ஏற்கனவே தங்கள் தலையாகிய கிறிஸ்துவுக்குள் அபிஷேகத்தை பெற்றிருக்கிறார்கள். ஆனால் இன்றைய விசுவாசிகளின் தேவை ஆவியானவரின் தெளிக்கப்படுதலாகிய பரிசுத்தமாகுதலேயாகும். இது ஒருநாள் கிரியையல்ல. அனுதினமும் விசுவாசியின் வாழ்க்கையில் நடைபெறும் கிரியையேயாகும். பரிசுத்தமானதை நடப்பிக்கும்படி நாம் நம் அவயங்களை நீதிக்கு அடிமைகளாக ஒப்புக் கொடுக்க வேண்டியவர் களாகவே இருக்கிறோம் (ரோமர் 6:19). அனுதினமும் ஆவியானவரின் பிரசன்னத்தில் வாழ்ந்து அவரை மகிமைப்படுத்துவதே தேவன் நம்மைப்பற்றி கொண்டுள்ள அவருடைய தீர்மானமாகும். இதற்காக நம்மையே ஆவியானவரின் பரிபூரண ஆளுகைக்கு உட்படுத்துவோமாக. இஸ்ரவேல் மக்கள் அவரை நடத்தினபடி இராத்தங்க இறங்குகிற வழிபோக்கனைப் போலவும், தேசத்தில் பரதேசியைப் போலவும் நாம் அவரை நடத்தாமல் நம்மை கிறிஸ்துவுக்குள் அபிஷேகித்த அவரை நம் வாழ்க்கையில் எல்லாவற்றிற்கும் எல்லாமாக வைத்து இவ்வுலக வாழ்க்கையை நடத்துவோமாக. (எரே. 14:8) இதுவே ஆவியினால் நிறைந்த வாழ்க்கை யாகும் (எபே. 5:18) இவ்வாழ்க்கையே நம் குறிக்கோளாயிருக்கட்டும்.

5

# பரிசுத்த ஆவியானவரின் கிரியைகள்

பெந்தெகொஸ்தே நாளில் தம் தலைமை ஸ்தாபனத்தை பரலோகத்திலிருந்து மாற்றிக் கொண்டு, கர்த்தர் தம் மணவாட்டியாகிய சபையை தம்மிடம் கொண்டு போய் சேர்க்கும் வரை, இப்போது சபையோடு தங்கி இருந்து வரும் பரிசுத்த ஆவியானவர் தம் மக்களுக்காக பல விதங்களில் கிரியை நடப்பிக்கிறவராயிருக்கிறார். மனிதனுடைய இரட்சிப்பின் திட்டத்தில் அவனுக்குப் பாவத்தைக் குறித்துக் கண்டித்து உணர்த்தி கிறிஸ்துவை அவனுக்கு வெளிப்படுத்தி, அவன் அவரை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொள்ள உதவி செய்து, அவனை தேவனுடைய குடும்பத்தில் பரிசுத்த ஜாதியாகப் பிறக்கச் செய்து அவனுக்கு நாளுக்கு நாள் அவனுடைய இரட்சகராகிய கிறிஸ்துவின் அழகையும் மேன்மையையும் எடுத்துக்கூறி அவனை கர்த்தரை அதிகமதிகமாக நேசிக்க உதவி செய்வதோடு கூட சபையின் பக்தி விருத்திக்காக தம் சித்தப்படி வரங்களைப் பகிர்ந்தளித்து இப்பாடுள்ள உலகில் தம் சபையைத் தேற்றி கடைசிவரை வழி நடத்திச் செல்லும் பொறுப்பும் பரிசுத்த ஆவியானவரைச் சார்ந்ததாகும். அவைகளை கிரமமாக தியானிப்போம்.

## 1. பாவ உணர்வை கொடுக்கும் கிரியை

பரிசுத்த ஆவியானவரின் கிரியை இல்லாமல் இவ்வுலகில் எந்த மனுஷனும் இரட்சிப்புக்கேதுவான பாவ உணர்ச்சியை பெற முடியாது. (யோவான்16:8)யூதாஸ்மனஸ்தாபப்பட்டான். ஆனால் ஆவியானவரால் அவனுக்கு அருளப்பட்ட பாவ உணர்ச்சியாக அது இல்லாததால், அவனை அது மரணத்துக்கு ஏதுவான தற்கொலைக்கு வழி நடத்தினது. உலகில் எத்தனையோ மக்கள் தங்கள் வாழ்க்கைக்காக மனஸ்தாபப்படுகிறவர்கள் உண்டு. மெய் மனஸ்தாபத்தோடு அறிக்கை செய்கிறவர்களும் உண்டு. ஆயினும் அவர்களுக்கு இரட்சிப்பு கிடைக்கிறதில்லை. காரணம் அவர்களுடைய மனஸ்தாபம் ஆவியானவரின் கிரியையாக இல்லை. ஒரு மனிதனுடைய மெய் மனஸ்தாபத்தை நாம் மனந்திரும்புதலாக ஏற்றுக் கொள்ள முடியாது. அது பரிசுத்த ஆவியினால் உண்டானதா என்பதை நாம் கண்டறிய வேண்டும் அப்போஸ்தலர் இரண்டாம் அதிகாரத்தில் பேதுருவினால் சுவிஷேசம் கேட்டவர்கள் அனைவரும் உள்ளத்தில் குத்தப்பட்டு பாவ உணர்ச்சி உள்ளவர்களாகி ஆண்டவன்மாரே நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்று கதறக் கூடியவர்களாக இருந்தார்கள். பவுல் வாழ்க்கையிலும் பிலிப்பு பட்டணத்து சிறைச்சாலை தலைவன் மனந்திரும்புதலிலும் இதை வாசிக்கிறோம். (அப். 2:37, 9:4-6; 16:29, 30)

தற்காலத்தில் இரட்சிப்பைப்பற்றி கேட்டால் சிலர் தேவனால் தங்கள் வியாதி சுகமானதினாலேயும் சிலர் தங்கள் உலகப் பிரகாரமான கஷ்டங்கள் நிவர்த்தியானதினாலேயும் சிலர் தங்கள் ஜெபங்களுக்கு பதில் கிடைத்ததினாலேயுமே ஞானஸ்நானம் பெற்று சபையில் சேர்ந்திருப்பதாகக் கூறுகிறார்கள். தேவன் சில சமயங்களில் உலகப்பிரகாரமான ஏதுக்களின் மூலமாக ஒருவனை இரட்சிப்பண்டை வழி நடத்துவதுண்டு. ஆனால் பரிசுத்த ஆவியானவர் அருளும் பாவ உணர்ச்சியைப் பெறாமல் இரட்சிப்புக்குள் அவன் பிரவேசிக்கமுடியாது. ஆகவே இரட்சிப்புக்கு முன் ஒருவனது வாழ்க்கையில் தேவ ஆவியானவர் அருளும் பாவ உணர்ச்சியும் மனந்திரும்புதலும் தெளிவாகக் காணப்படுதல் அவசியம். சிலர் கிறிஸ்துவின் அன்பையும் கிருபையையும் உலகப்பிரகாரமாக சிந்தித்து உணர்ச்சிவசப்பட்டு ஞானஸ்நானம் பெற முன்னேறி வருகிறார்கள். இவ்விதமாய் ஆவியானவர் அருளும் பாவ உணர்ச்சியும் மனந்திரும்புதலும் இல்லாமல் இரட்சிக்கப்பட்டோமென்று நினைத்துக் கொண்டு ஞானஸ்நானம் எடுத்து பெயர் விசுவாசிகளாக வாழ்பவர்கள் இக்கடைசி காலத்தில் ஏராளம் உண்டு என்பது துக்கமான காரியமாகும். இப்படிப் பட்டவர்களே ஜென்ம சுபாவமுள்ளவர்களாய் சபைகளில் குழப்பத்துக்கும் கலகத்துக்கும் காரணமாயிருந்து கழுவப்பட்ட பன்றி சேற்றிலே புரள திரும்பினது போல சிலகாலம் கழித்து தாங்கள் விட்டு வந்த பாவங்களுக் குள்ளும் சிலர் விக்கிரகாரதனைக்குள்ளும் போகிறார்கள்.

சகோதரனே சகோதரியே ஒரு நாளில் நாம் நம் பாவத்தில் ஜீவித்த சமயம் நமக்குள்ளே உருவான பாவ உணர்ச்சி பரிசுத்த ஆவியானவரிடத்திலிருந்து கொடுக்கப்பட்டதினாலேயே இன்று ஜீவனுக்கேதுவான மனந்திரும்புதலைப் பெற்று அனுபவிக்கிறோம். (அப். 11:18) இதற்காக எத்தனையாய் நம் ஆண்டவரை ஸ்தோத்தரிக்க கடனாளிகளாக இருக்கிறோம்.

## 2. கிறிஸ்துவை வெளிப்படுத்தும் கிரியை

ஆவியானவர் தேவனால் தெரிந்து கொள்ளப்பட்டவர்களுக்கு ஜீவனுக்கேதுவான மனந்திரும்புதலை அருளிச் செய்வது மாத்திரமல்ல. கிறிஸ்துவை வெளிப்படுத்துகிறவராயும் இருக்கிறார் (யோவான் 16:13,14; 1கொரி. 2:8 -10). விசுவாசிகளாகிய நாம் மிகவும் எளிதாக கிறிஸ்துவை நம்பி விசுவாசித்து நேசிக்கிற காரணம் நம்முள்ளிருக்கும் பரிசுத்த ஆவியானவரின் கிரியைதான். உலக மனிதன் ஒருவனும் கிறிஸ்துவை நாம் அறிந்திருக்கிறபடி அறிந்து கொள்ளவே முடியாது. அவனுடைய படிப்போ ஞானமோ அவனுக்கு கிறிஸ்துவை காட்ட முடியாது. (1. கொரி. 1:18 -24; கலா. 1:15 -17)

தேவனுடைய பிள்ளைகளாக நாம் கிறிஸ்துவை அறிந்து கொண்டிருப்பதால் திரியேக தேவனைப் பற்றிய வெளிப்பாடும் நமக்கு அருளப்பட்டிருக்கிறது. பிதாவாகிய தேவனை நோக்கி ஜெபித்து கிறிஸ்துவின் நாமத்தில் நாம் அதை ஏறெடுக்கும்போது விசுவாசிகளாகிய நம்

இருதயத்தில் இரண்டு தேவர்கள் இருப்பதான சிந்தை ஒரு போதும் எழுந்ததில்லை. மூன்றிலொன்றாய் வெளிப்பட்டிருக்கும் தேவாதி தேவனின் மகிமையை கிறிஸ்துவுக்குள் நமக்கு விளங்கச் செய்தவர் ஆவியானவரேயாகும். (1 யோவான் 5:7). இந்த வெளிப்படுத்துதலுக்காக நாம் கர்த்தரைத் துதிப்போமாக.

## 3. கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளச் செய்யும் கிரியை

பரிசுத்த ஆவியானவரே விசுவாசிகள் தங்கள் இருதயங்களைத் திறந்து இரட்சகரை ஏற்றுக் கொள்ள உதவி செய்கிறவராயிருக்கிறார். பாவ உணர்ச்சியைக் கொடுத்து கிறிஸ்துவை வெளிப்படுத்துவது மாத்திரமல்ல அவரை அவன் தன் இரட்சகராக ஏற்றுக்கொள்ளும்படி விசுவாசிக்கு உணர்வளிப்பவரும் பரிசுத்த ஆவியானவரே. தேவ ஆவியின் கிரியை யில்லாமல் ஒருவனும் கிறிஸ்துவை தன் சொந்த இரட்சகராக ஏற்றுக் கொள்ளமுடியாது. ஆகவேதான் பரிசுத்த ஆவியினுடைய புதிதாக்கு தலினால் நாம் இரட்சிக்கப்பட்டிருப்பதாக வாசிக்கிறோம். (தீத்து 3:5)

ஆபிரகாமின் ஊழியக்காரன் தன் எஜமானைப் பற்றியும் அவனுக்குண்டான மேன்மைகளைப் பற்றியும் லாபானின் வீட்டாருக்கு விவரித்துக் கூறி சில பொன்னாபரணங்களை ரெபேக்காளுக்குக் கொடுத்து அவளை மகிழ்வித்ததினாலேயே நீ இந்த மனிதனோடு போகிறாயா? என்று அவள் வீட்டார் கேட்ட போது ரெபேக்காள் போகிறேன் என்றாள் (ஆதியாகமம் 24). இவ்விதமாக நமக்குள்ளே பாவ உணர்ச்சியை மாத்திரம் பரிசுத்த ஆவியானவர் கொண்டு வந்து நிறுத்திக் கொள்ளாமல் நம்முடைய ஒரே தேவையாகிய கிறிஸ்துவை நம் முன் நிறுத்தி அவருடைய மகிமையை நமக்குக் காட்டி அவரை உள்ளன்போடும் நம் முழு இருதயத்தோடும் நாம் ஏற்றுக் கொள்ளும்படி உதவி செய்கிறார். அவர் என்னுடையதில் எடுத்து உங்களுக்கு அறிவிப்பதினால் என்னை மகிமைப்படுத்துவார் (யோ. 16:13) என நம் அருமை இரட்சகர் கூறின வார்த்தைகளின் அர்த்தம் இதுவே. பரிசுத்த ஆவியானவரால் கிறிஸ்துவின் மகிமை ஒரு விசுவாசிக்கும் முன் கொண்டு வரப்பட்டால் மாத்திரமே அவன் அவரை முழு இருதயத்தோடு தன் இரட்சகராக ஏற்றுக் கொள்ள முடியும். உலகில் பலர் கிறிஸ்துவை ஓர் மத தலைவராக, நல்ல மனிதனாக, ஓர் அன்பின் சொரூபியாக, தேவ அவதாரமாக ஏற்றுக் கொண்டுள்ளார்கள். ஆனால் பரிசுத்த ஆவியானவரின் உதவியினால் மாத்திரமே ஒருவன் கிறிஸ்துவை தன் சொந்த இரட்சகராக ஏற்றுக் கொள்ள முடியும்.

## 4. மறுபிறப்பு அருளி தேவ குடும்பத்தில் சேர்க்கும் கிரியை

ஒரு விசுவாசிக்கு பாவ உணர்வைக் கொண்டு வந்து கிறிஸ்துவின் தேவையை அவனுக்கு உணர்த்தி அவனை கிறிஸ்துவைத் தன் சொந்த இரட்சகராக மனதார ஏற்றுக் கொள்ள பரிசுத்த ஆவியானவர் உதவி செய்கிறது மாத்திரமல்ல, அந்த விசுவாசி கர்த்தரை ஏற்றுக் கொள்ளும் அதே நேரத்தில் அவனை மறுபிறப்பு அடையச் செய்து தேவனுடைய பிள்ளையாக

ஆக்கும் பொறுப்பையும் அவர் ஏற்றுக்கொள்கிறார். ஆவியினால் பிறப்பது ஆவியாயிருக்கும் (யோவான் 3:6). உலகிலுள்ள நாமெல்லாரும் மாம்சத்தில் அதாவது ஜலத்தில் பிறந்தவர்களாகவே இருக்கிறோம். ஜலம் என்பது மாம்சத்தைக் குறிக்கும் ஓர் சொல்லாக இருக்கிறது. (1 யோ. 5:6, 8) ஆகவே நாம் ஜலத்தினால் (அதாவது மாம்சத்தினால் புருஷ சித்தத்தின்படி) பிறந்தவர்களாய் மாத்திரம் இருந்து ஆவியினால் பிறக்கும் மறுபிறப்பை அடையாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிக்க முடியாதென வாசிக்கிறோம். (யோ. 3:3 ) ஜலம் வேதவசனத்துக்கு அடையாளமாகவும் வேதாகமத்தில் கூறப்பட்டுள்ளது (எபே. 5:26). ஆகவே இப்படி அர்த்தப்படுத்தினாலும் வசனத்தினாலும் தேவ ஆவியினாலுமே ஒருவன் மறுபிறப்படைகிறான் என நாம் அறியமுடியும். ஆகவே இவ்விதமாய் ஆண்டவர் தேவ ஆவியை நமக்கு அருளியே நம்மை தேவனுடைய குடும்பத்தில் ஒருவராக சேர்த்து கிறிஸ்துவுக்கு உடன் சுதந்திரராக மாற்றுகிறார் (1 பேதுரு. 2:9; எபே. 2:18-22; ரோமர் 8:15 -17)

மறுபிறப்பு என்பது உலக மனிதனின் அறிவுக்கும் அனுபவத் திற்கும் அப்பாற்பட்ட காரியமாகவே உள்ளது. அதை நடப்பிப்பது தேவ ஆவியானவராக இருப்பதால் மறுபிறப்படைந்தவர்கள் மாத்திரமே தங்கள் வாழ்கையில் நடந்த இம்மாபெரும் மாற்றத்தை உணர்ந்து அனுபவிக்க முடியும்.

இதுவரை விக்கிரகங்களுக்கு முன் பணிந்து தெய்வத்தைப் பற்றி எந்த வெளிப்பாடும் இல்லாமல் இருளில் தடவித் திரிந்த மக்கள் மறுபிறப்படைந்த பின் தங்களை அறியாமலேயே தேவனை அப்பா, பிதாவே என்று அழைத்து ஜெபிக்க ஆரம்பிக்கின்றனர். படிப்பு வாசனையே இல்லாத பின் தங்கிய கிராமங்களில் விக்கிரகாராதனையில் மூழ்கியிருந்து இரட்சிக்கப்பட்ட விசுவாசிகளின் ஜெபத்தை கவனித்துப் பாருங்கள். என்ன அழகாக எவ்வளவு கருத்தாக ஜெபிக்கிறார்கள். இந்த கிருபையை அவர்கள் எப்படி பெற்றுக் கொண்டார்கள்? பரிசுத்த ஆவியானவர் அவர்களுக்குள் இருந்து அவர்களை தேவனுடைய பிள்ளைகளாக மாற்றினதினாலேயே இந்தக் கிருபை அவர்களுக்குக் கிடைத்திருக்கிறது. (கலா. 3:26; 4:6, ரோமர் 8:14 -16)

## 5. கிறிஸ்துவின் மகிமையை விசுவாசிக்கு காட்டும் கிரியை

விசுவாசிக்கு அவன் இரட்சிக்கப்பட மனந்திரும்புதலை அருளிச் செய்து அவனுக்கு மறுபிறப்பு கொடுத்து தேவனின் குடும்பத்தினனாக அவனை மகா மேன்மையான ஆசீர்வாதத்துக்குள் வழி நடத்துவது மாத்திரமல்ல, அவனை நாடோறும் கிறிஸ்துவின் சாயலில் வளர்க்க எப்போதும் கிறிஸ்துவின் மகிமையை அவனுக்கு எடுத்துக் காட்டுவதும் பரிசுத்த ஆவியானவரே.

சத்திய ஆவியாகிய அவர் வரும்போது சகல சத்தியத்திற்குள்ளும் உங்களை நடத்துவார் என்றும் பிதாவினுடையவைகள் யாவும் என்னுடையவைகள், அதினாலே அவர் என்னுடையதில் எடுத்து

உங்களுக்கு அறிவிப்பார் என்றும் நம் அருமை இரட்சகரே கூறியுள்ளார். (யோ. 16:13, 15) கிறிஸ்துவே சத்தியமாயிருக்கிறார். "நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன்" என்றவர் நம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து ஒருவரேயாகும். (யோ. 14:6) யோவான் 16:13ல் சகல "சத்தியத்திற்குள்ளும்" என்றே ஒருமையில் போடப்பட்டிருக்கிறது. ஆங்கில வேதாகமத்திலும் அப்படிதான் இருக்கிறது. விசுவாசிகள் கைக் கொள்ள வேண்டிய சத்தியங்கள் அநேகம் இருந்தாலும் பூரணமாக நாம் அறிய வேண்டிய சத்தியம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவேயாகும். இந்த சத்தியத்துக்குள் நம்மை நடத்துகிறவர் பரிசுத்த ஆவியானவரே. நாம் அவருக்கு சாட்சியாயிருக்கும்படி அவரைக் குறித்து ஆவியானவர் சாட்சி கொடுக்கிறவராயிருக்கிறார் (யோவான் 15:26, 27. அப். 1:8).

தேவ ஆவியினால் போதிக்கப்படுகிறவன் கிறிஸ்துவால் நிறைந்தவனாக இருப்பான். தேவனுடைய பரிசுத்த மனுஷர்கள் பரிசுத்த ஆவியினாலே ஏவப்பட்டு பேசி எழுதின வேதவாக்கியங்கள் முழுவதும் கிறிஸ்துவால் நிறைந்து ததும்புகிறவைகளாகவே இருக்கின்றன (11பேதுரு 1:20, 21, 11 தீமோ. 3:16, 17).

பழைய ஏற்பாடும் புதிய ஏற்பாடும் கிறிஸ்துவாகிய வார்த்தையாலேயே நிறைந்திருக்கிறது. (லூக்கா 24:25, 44-46, அப். 7:37, 9:22) இதை தேவ ஆவியானவரின் ஒத்தாசையின்றி தங்கள் சுய ஞானத்தினாலே படித்து கற்றுக் கொள்ள வேண்டுமென்று வேத சாஸ்திரிகள் விரும்பின காரணத்தினாலேயே வேதத்தின் மையமாகிய கிறிஸ்துவை அவர்கள் காணக் கூடாமற் போயிற்று (அப். 13:27)

இக்கடைசி காலத்திலும் பரிசுத்த ஆவியானவர் வேத வாக்கியங்கள் மூலமாகவே கிறிஸ்துவின் மகிமையையும் சத்தியங்களையும் நம் முன் வைக்கிறார். உலக ஞானத்தில் வேதம் படித்து கிறிஸ்துவை அறிய விரும்புகிறவன் எவனும் அவரை அறிய வேண்டிய பிரகாரம் அறிய முடியாது என்பது திண்ணம். ஆகவே தான் இன்றைய நாட்களிலுள்ள வேதாகமக் கல்லூரிகளும் தேவ சாஸ்திர கலாசாலைகளும் கிறிஸ்துவை அறிய வேண்டிய பிரகாரம் அறியாத உலக ஞானமுள்ள பெயர் கிறிஸ்தவர்களை உருவாக்கி வருகின்றன. இவர்கள் தேவனால் தெரிந்து கொள்ளப்பட்டவர் களாக இல்லாததால் ஆவியானவரின் போதனையில்லாமல் தங்கள் லவுகீக ஞானத்தினாலே பைத்தியக்காரர்களாகி தங்கள் கரங்களுக்குள்ளடங்கிய மந்தையையும் கிறிஸ்துவற்ற நித்தியத்துக்குள் வழி நடத்துகிறார்கள். இப்படிப்பட்டவர்களுக்கு விலகியிருப்போமாக. இவர்கள் ஆவியானவர் வெளிப்படையாகச் சொல்லுகிறபடி, கடைசி காலத்துக்கு அறிகுறியாக வெளிப்படும் மனசாட்சியில் சூடுண்ட பொய்யராய் இருந்து வஞ்சிக்கிற ஆவிகளால் பிசாசின் உபதேசங்களை போதிக்கிறவர்கள் (1 தீமோ.4:1). ஆகவே ஆவியானவரின் சத்திய போதனையை அவருடைய வசனத்தின் வெளிச்சத்தில் கற்று கிறிஸ்துவின் மகிமையில் களிகூர்ந்து உள்ளன்போடு அவரை நேசிக்கும்படி விசுவாசிகளாகிய நாம் நம்மை பரிபூரணமாக

ஆவியானவரின் போதனைக்கு ஒப்புக்கொடுப்போமாக.

## 6. வரங்களைப் பகிர்ந்தளிக்கும் கிரியை

தேவன் தம் சுய ரத்தத்தினால் சம்பாதித்த சபைக்கு பரிசுத்த ஆவியானவர் கிறிஸ்துவின் மகிமையை வெளிப்படுத்தி அவர்கள் அவரை அதிகமாக நேசிக்கச் செய்வதோடு கூட அவர்களைத் தம் உடன் ஊழியர்களாக பயன்படுத்தி சபையை பக்திவிருத்தியடையச் செய்ய விசுவாசிகளுக்கு தம் சித்தத்தின்படி ஆவிக்குரிய வரங்களை பகிர்ந்தளிக்கிறவராயுமிருக்கிறார்.

சுவிசேஷத்தினாலேயே தேவன் (2 தெச. 2:17) விசுவாசிகளை இரட்சிப்புக்கு அழைப்பதால், சபையின் ஆரம்ப முதல் அது நடுவானில் கர்த்தரோடு எடுத்துக் கொள்ளப்படும் நாள் வரைக்கும், சுவிசேஷ ஊழியம் நடைபெற வேண்டியுள்ளது. சபை ஆரம்ப காலத்தில் சுவிசேஷம் அறிவிக்கப்பட்டதோடு கூட, வசனமும் உறுதிப்படுத்தப்பட வேண்டிய தாயிற்று. ஆதி அப்போஸ்தலருக்கும் விசுவாசிகளுக்கும் தேவன் ஆவியினாலே பற்பல வரங்களைக் கொடுத்து இவ்வூழியங்களை நிறைவேற்றினார். அவர் தம் சித்தப்படி ஒருவனுக்கு ஆவியினாலே ஞானத்தைப் போதிக்கும் வசனத்தையும், வேறொருவனுக்கு அந்த ஆவியினாலேயே அறிவை உணர்த்தும் வசனத்தையும், வேறொருவனுக்கு அந்த ஆவியினாலேயே விசுவாசத்தையும், வேறொருவனுக்கு அந்த ஆவியினாலேயே குணமாக்கும் வரங்களையும், வேறொருவனுக்கு அற்புதங்களைச் செய்யும் சக்தியையும், வேறொருவனுக்கு தீர்க்கதரிசனம் உரைத்தலையும், வேறொருவனுக்கு ஆவிகளைப் பகுத்தறிதலையும், வேறொருவனுக்கு பற்பல பாஷைகளை பேசுதலையும், வேறொருவனுக்கு வியாக்கியானம் பண்ணுதலையும் அளித்தார். அநந்த ஞானமுள்ள தேவன் விசுவாசிகள் ஒவ்வொருவருக்கும் எல்லா வரங்களையும் அளிக்காமல் சபைக்காக பிரயோஜனப்படுத்தும்படி அவைகளைப் பகிர்ந்தளிக்கிறார். ஏனெனில் வித்தியாசமான காலங்களில் வித்தியாசமான ஊழியங்கள் நடைபெற வேண்டியதாயிருக்கிறது (1 கொரி. 12:1-14; 29, 30) கர்த்தர் விரும்பும் ஊழியம் நிறைவேற அவரால் எந்த அதிசயங்களையும் இன்றும் செய்யமுடியும். அவர் நேற்றும், இன்றும், என்றும் மாறதவராய் இருக்கிறார். பழையவரம் உட்பட எந்த வரமும் ஊழியத்துக்கு தேவையானால் கர்த்தர் அதை அருளவல்லவர்.

இச்சந்தர்ப்பத்தில் நாம் ஒரு உண்மையை அறிய வேண்டும். சபையின் ஆரம்ப நாட்களில் புதிய ஏற்பாடு எழுத்துவடிவில் இல்லை. அப்போஸ்தலரும் சீஷரும் ஆரம்ப விசுவாசிகளும் பெரும்பாலானோர் கல்வியறிவில்லாதவர் களாக இருந்தார்கள். மாம்சமான எவனும் தேவனுக்கு முன் பெருமை பாராட்டாதபடி தேவன் பெரும்பான்மையாக உலகத்தின் இழிவானவைகளையும் உலகில் அற்பமாய் எண்ணப்பட்டவைகளையும், இல்லாதவைகளையும், பலவீனமானவைகளையும், பயித்தியமானவை

களையுமே தேர்ந்தெடுத்து அவர்களுக்கு தம் வரங்களைப் பகிர்ந்தளித்து அவர்கள் மூலம் சுவிசேஷ பணியை நிறைவேற்றி அவர்களால் அற்புத அடையாளங்களை நடப்பித்து வசனத்தை உறுதிப்படுத்த சித்தங் கொண்டார். (1 கொரி.1:27-29; அப்.14:3; ரோமர் 15:18) அது மாத்திரமல்ல, மோசேயின் மூலமாக நியாயப் பிரமாணத்தைப்பெற்று பக்தி வைராக்கியமாக அதுவரை வாழ்ந்துவந்த யூதமார்க்கத்திலமைந்தவர்கள், கிறிஸ்து நியாயப் பிரமாணத்தின் முடிவாயிருக்கிறார் என்ற சத்தியத்தையும் இயேசு கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசமே ஒரு மனிதனுக்கு நீதியாக எண்ணப்படுகிறது என்ற சத்தியத்தையும் எப்படி எளிதாக ஏற்றுக்கொள்ளுவார்கள்? ஆகவேதான் வசனத்தை உறுதிப்படுத்த, ஆதி அப்போஸ்தலர்களாலும் விசுவாசிகளாலும் பலத்த கிரியைகளையும் அடையாள அற்புதங்களையும் தேவ ஆவியானவர் நடப்பிக்க வேண்டியதாயிருந்தது. (அப்.3:6-16; 4:8-13, 31; 5:12; 15:16, 6:7, 14:3; 16:26; ரோமர் 15:18). அதற்கு இவ்வரங்கள் பிரயோஜனப்பட்டன.

வசனம் உறுதிப்படுத்தப்பட்டு சபை பெருக ஆரம்பித்த போது வசனத்தை உறுதிப்படுத்த தேவனால் கையாளப்பட்டு வந்த அற்புத அடையாள வரங்களின் உபயோகம் கொஞ்சம் கொஞ்சமாக குறைய ஆரம்பித்தது. சில வரங்கள் ஒழிந்து ஓய்ந்தும் போயின (1 கொரி.13:8). பவுல் அப்போஸ்தலின் காலத்தின் இறுதியிலேயே குணமாக்கும் வரத்தின் உபயோகம் குறைவுபட ஆரம்பித்ததை நாம் காணலாம். தன் கடைசி நிருபங்களாக தீமோத்தேயுவுக்கு எழுதின நிருபங்களில் அவர் இதைக் குறிப்பிடுகிறார். (1 தீமோ. 5:23;2, தீமோ. 4:20) அதற்குப்பதில் சபையின் பக்திவிருத்திக்காகவும், பரிசுத்தவான்களின் சீர்பொருந்துதலுக்காகவும் ஆவிக்குரிய வரங்களின் உபயோகம் சபையில் அதிகரிக்க ஆரம்பித்து இப்பொழுதும் சபைகளால் அனுபவிக்கப்பட்டு வருகிறது.

பரிசுத்த ஆவியானவர் சபையின் அஸ்திபாரத்துக்காகவும், கட்டுமான பணிக்காகவும், சுவிசேஷப் பணிக்காகவும், கர்த்தருடைய வருகை மட்டும் அதை போஷித்து காத்து இவ்வுலகில் வழி நடத்தத் தக்கதாகவும் அதற்கு தேவையான ஐந்து ஆவிக்குரிய வரங்களானவர்களை கொடுத்துள்ளார். அவர்கள் அப்போஸ்தலர், தீர்க்கதரிசிகள், சுவிசேஷகர்கள், மேய்ப்பர்கள், போதகர்களாவர். (எபே. 4:11-13) இவர்களில் அப்போஸ் தலரும் தீர்க்கதரிசிகளும் சபையின் அஸ்திபாரம் போடவே உபயோகப் படுத்தப்பட்டார்கள். (எபே. 2:20) சபையின் ஆரம்பகாலத்தில் எழுப்பப்பட்ட இவர்கள் வசனத்தை உறுதிப்படுத்த அற்புத அடையாளங்களைச் செய்து, வருங்கால நிகழ்ச்சிகளை முன்மொழிந்து, வேத வாக்கியங்களைப் பகிர்ந்து கொடுத்தார்கள். தங்கள் ஊழிய முடிவில் இவர்கள் மூலம் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் புதிய ஏற்பாடாகிய வேத வாக்கியங்களனைத்தும் புத்தக வடிவில் உருவாக்கப்பட்டு முற்றுப் பெற்ற நிலையில் சபைக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. சபையின் அஸ்திபாரம் அப்போஸ்தலர், தீர்க்க தரிசிகளால் போடப்பட்டு அவ்வேலை முடிவு பெற்றுள்ளதால் இப்போது சபையில் இந்த இரு வரங்களுள்ளவர்கள் உபயோகத்திலில்லை. இவர்களின் அஸ்திபாரத்தின் மேல் கட்டப்பட்டு வரும் சபையில் தற்சமயம் சுவிசேஷகர்,

மேய்ப்பர்கள், போதிகர்களான மற்ற மூன்று வரங்களுள்ளவர்களை மாத்திரமே பரிசுத்த ஆவியானவர் சபையின் கட்டுமான பணியில் உபயோகப்படுத்தி வருகிறார். கர்த்தருடைய வருகை மட்டும் இவ்வுலகில் தம் சபையோடு தாபரித்துள்ள பரிசுத்த ஆவியானவர் இந்த மூன்று வரங்களின் மூலமாக தம் சபையை பக்திவிருத்தியடையச் செய்து, பரிசுத்தப்படுத்தி பழுதற்ற மணவாட்டியாக கர்த்தருக்கு முன் நிறுத்த கிரியை செய்து வருகிறார். கர்த்தருடைய வருகை மட்டும் அவருடைய சுய இரத்தம் சிந்தி சம்பாதித்த சபையை மேய்த்து அவர்களுக்கு உபதேசிக்க மேய்ப்பரையும், போதகர்களையும் உபயோகித்து, சுவிசேஷ பணியை சுவிசேஷகர்களால் ஆவியானவர் நடத்தி வருகிறார். தேவ ஆவியானவரின் இந்த நேர்த்தியான சபை பரிபாலன ஒழுங்குமுறைகளுக்காக கர்த்தரைத் துதிப்போமாக. அதேவேளையில் சத்துருவானவன் தனக்குக் கொஞ்சகாலம் தான் உண்டென்று அறிந்து அவிசுவாசிகளை கர்த்தருடைய நாமத்திலே தீர்க்கதரிசனம் உரைத்து பிசாசுகளைத் துரத்தி அற்புத அடையாளம் செய்ய வைத்து மனிதரை வஞ்சிக்கிறவனாயிருக்கிறான் என்பதை நாம் இக்காட்சி நாட்களில் மறந்துபோகக்கூடாது (மத்தேயு 7:22,23)

## 7. தேற்றரவாளனின் கிரியை

பரிசுத்த ஆவியானவருக்குக் கொடுக்கப்பட்ட பெயர்களில் ஒன்று "தேற்றரவாளன்" என்பதாகும் (யோவான் 16:7). கிறிஸ்து இவ்வுலகில் இருந்தபோது தம்மக்களின் தேற்றரவாளனாக இருந்தார். ஆகவே பரிசுத்த ஆவியானவர் தம் மக்களுடன் என்றென்றும் தங்கியிருக்கும் வேறொரு தேற்றரவாளன் எனவும் அழைக்கப்படுகிறார். (யோ. 14:16)

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தம் பிதாவினிடத்துக்குத் திரும்பிப் போனதினாலேயே பரிசுத்த ஆவியாகிய தேற்றரவாளன் இவ்வுலகுக்கு வந்துள்ளார். அவர் போகாதிருந்தால் தேற்றரவாளன் வந்திருக்கமாட்டார் (யோ.16:7). இதிலிருந்து கிறிஸ்து தம் பிரதிநிதியாகவே பரிசுத்த ஆவியானவரை நம்மோடு என்றும் தங்கியிருக்கும்படி அனுப்பியுள்ளார் எனத் தெரிகிறது.

நான் உங்களைத் திக்கற்றவர்களாக விடேன், உங்களிடத்தில் வருவேன். (யோ. 14:18) என கூறின கிறிஸ்து தேற்றரவாளனாக தம் மக்களோடு தங்கியுள்ளார். ஆகவே தான் கிறிஸ்துவின் ஆவியில்லாதவன் அவருடையவனல்ல (ரோமர் 8:9) என வேதம் கூறுகிறது.

விசுவாசிகளாகிய நமது பெலவீனங்களில் நமக்கு உதவி செய்து வாக்குக்கடங்காத பெரு மூச்சுகளோடு நமக்காக வேண்டுதல் செய்து நம்மை காப்பாற்றி ஆதரித்து வருவதும் பரிசுத்த ஆவியானவரே (ரோமர் 8:26). நாம் தேவனுடைய பிள்ளைகளாயிருக்கிறோமென்று நம் ஆவியுடனே சாட்சி கொடுத்து இந்த கண்ணீர் நிறைந்த உலகில் நம்மை தேற்றி வருபவரும் பரிசுத்த ஆவியானவரே ஆகும் (ரோமர் 8:16). தம்மில் அன்பு கூறுகிறவர் களுக்கு தேவன் ஆயத்தப்படுத்தினவைகளும் லவுகீக மனுஷனுடைய இருதயத்துக்குத் தோன்றாதவைகளுமான மகத்துவமும் மேன்மையுமான

காரியங்களை தேவன் தம் ஆவியானவராலேயே வெளிப்படுத்தி, நம்மை உற்சாகப்படுத்தி நம் கண்களை உயரே திருப்புகிறார் (1கொரி. 2:9, 10)

விசுவாசிகளாகிய நமக்கு நம்முடைய அருமை இரட்சகரினால் அருளப்பட்ட இந்த பரிசுத்த ஆவியானவருக்காக நாம் தேவனை ஸ்தோத்தரிப்போமாக. நம்மோடு என்றென்றும் தங்கி தம்முடைய ராஜ்யம் கொண்டு போகும் வரை நமக்கு அச்சாரமாக கொடுக்கப்பட்டு நம்மைப் பற்றிய முழு பொருப்பையும் ஏற்றுள்ள பரிசுத்த ஆவியானவருக்கு நம் வாழ்வில் பரிபூரண ஆளுகையை அளித்து (எபே. 1:13, 14) அவரை துக்கப்படுத்தாமல் (எபே. 4:30) அவரை மனமகிழ்ச்சியோடு நம்மில் தங்கி வழி நடத்த இடங்கொடுப்போமாக.

6

# பரிசுத்த ஆவியானவரின் நிறைவு

புதிய ஏற்பாடு விசுவாசிகளுக்கு ஆவியைப் பெற்றுக் கொள்ளுங்கள் என்பதல்ல. ஆவியினால் நிறைந்திருங்கள் என்பதே கட்டளையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. (எபே. 5:18) இரட்சிப்பின் சுவிசேஷமாகிய சத்திய வசனத்தைக் கேட்டு விசுவாசிகளான போது தேவ ஆவியைப் பெற்றுக் கொண்ட எல்லாரும் (எபே. 1:13) ஆவியின் நிறைவைப் பெற்றவர்கள் என கூற இயலாது. ஆவியைப் பெற்றுக்கொள்ளுதல் வேறு, ஆவியினால் நிறைந்திருப்பது வேறு. ஆவியைப் பெற்றுக் கொள்வது விசுவாசியின் ஒரு நாள் அனுபவமாகும். அவனது இரட்சிப்பின் நாளில் அவன் கிறிஸ்துவுக்குள் அவ்வாறு பரிசுத்த ஆவியால் முத்திரிக்கப்படுகிறான். ஆனால் அவனை முத்திரித்து அவனுக்குள்ளே உள்ள தேவ ஆவியானவரால் நிறைந்திருப்பது அனுதின அனுபவமாகும்.

ஆவியானவர் ஒரு விசவாசியை வெளியிலிருந்து நிறப்புவதில்லை. "என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் எவனோ அவன் உள்ளத்திலிருந்து ஜீவத் தண்ணீருள்ள நதிகள் ஓடும்" என இரட்சகர் கூறின இரகசியம் இதுவே. (யோ.7:38). அவனுக்குள்ளே யிருக்கக்கூடிய ஜீவதண்ணீர் அவனுடைய வாழ்க்கையில் பொங்கி நிறம்புகிற அனுபவமே ஆவியின் நிறைவு ஆகும். விசுவாசிகளாகிய நமக்குள் வாசம் பண்ணும் தேவ ஆவியானவர் நம் வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியையும் நிறப்பி நம்மைப் பூரணமாக ஆட்கொண்டு வாழவே விருப்பம் கொண்டுள்ளார். அது அவரது உரிமையுமாகும். தேவகுமாரன் தம்மையே நமக்காக பரிபூரணமாக ஒப்புக்கொடுத்ததால், தேவ ஆவியானவர் நம்மை ஆட்கொள்ள அவருக்கு பூரண உரிமையும் அதிகாரமுமுண்டு. ஆயினும் அவர் தம் பிள்ளைகளின் அனுமதியில்லாமல் அவர்களை ஆட்கொள்வ தில்லை. மனதார, கர்த்தர் மேலுள்ள அன்பினிமித்தமும் அவருடைய சிலுவைப்பாடுகளின் மகத்துவத்தினிமித்தமும் நாம் தேவ ஆவியானவருக்கு நம்மை பூரணமாக திறந்து கொடுத்து அவரால் நிறப்பப்பட்ட பாக்கிய நிலமையில் வாழவே அவர் விரும்புகிறார்.

இஸ்ரவேல் ஜனங்கள் இதில் எவ்வளவாக தவறிப்போனார் களென்று வேதாகமத்தில் வாசிக்கிறோம். அவர்களுடைய ஆபத்து காலத்தின் நம்பிக்கையாகவும் இரட்சகராகவும் இருந்தவரை தேசத்தில் பரதேசியைப் போலவும் இராத்தங்க இறங்குகிற வழிப்போக்கனைப் போலவும் அவர்கள் நடத்தினதைக்குறித்து தேவன் வேதனைப்பட்டார். (எரே. 14:8) அதினிமித்தம் அவர் அவர்களுக்கு விடாய்த்துப் போன புருஷனைப் போலவும் இரட்சிக்கமாட்டாத பராக்கிரமசாலியைப் போலவும் இருக்கவேண்டியதாயிற்று (எரே. 14:9). ஆகவே கடந்தகால இஸ்ரவேல்

மக்களின் சரித்திரம் வீழ்ச்சியில் முடிந்தது. விசுவாசிகளாகிய நமக்கு தேவன் தம்முடைய குமாரனுடைய ஆவியை நம்மேல் சம்பூரணமாகப் பொழிந்தருளியுள்ளதால் (யோ. 3:34; தீத்து 3:7, கலா 4:6) நாமொருவ ராவது வல்லமையற்றவர்களாயிருக்க வேண்டிய அவசிய மில்லை. ஆனால் இஸ்ரவேல் ஜனங்களைப்போல கர்த்தர் என் வீட்டின் தலைவர் என நாம் கூறிக்கொண்டாலும் அவரை மெய்யாகவே நம் சரீரமாகிய வீட்டின் தலைவராக நாம் நடத்துவதில்லை. ஓர் பரதேசியைப்போல அல்லது ஒரு வழிப்போக்கனைப் போல நம்மேல் எந்த உரிமையும் அற்றநிலையில் நம்மில் தங்குகிற பரிசுத்த ஆவியானவரை ஒதுக்கி வைத்துள்ளோம். இதினிமித்தமே, விசுவாசிகளாகிய நாம் அனுபவிக்க வேண்டிய மகத்துவமான வாழ்க்கையை அனுபவிக்கக் கூடாதவர்களாக இருக்கிறோம். ஒழுங்காக சபைக்கு போகிறோம், காணிக்கை கொடுக்கிறோம். வேதம் வாசிக்கிறோம் ஜெபிக்கிறோம் ஆனால் பரிசுத்த ஆவியானவர் நம்மை பரிபூரணமாக நிறப்பி நம்மை ஆள அவருக்கு நாம் இடம் கொடுக்கிறதில்லை. இந்த ஆவிக்குரிய வாழ்க்கைதான் விசுவாசியின் வாழ்க்கை என்று எண்ணி திருப்திபெற்று வாழுகிற விசுவாசிகளுமுண்டு. விசுவாசியே தேவ ஆவியானவருக்கு நம் வாழ்க்கையில் பூரண உரிமை உண்டா? தம்மையே நமக்கு தந்தாரே நம்மையே நாம் அவருக்குக் கொடுக்க என்ன தடை? பழைய ஏற்பாட்டின் பக்தர்களைப் பார்க்கும்போது எவ்வளவாய் அவர்களில் சிலர் தேவனையே எல்லாவற்றிற்கும் எல்லாமாக வைத்து உன்னத பாக்கியமான நிலைமையில் வாழ்ந்து கடந்து சென்றிருக்கிறார்கள்!.

ஆபிரகாம் தன் ஒரேபேரான குமாரனென்றும் பார்க்கவில்லை. தேவன் சொன்னபடி அவரை பலி செலுத்த தாமதிக்காமல் கூட்டிச் சென்றான். யோபு தன் பத்து மக்களையும் ஒரேநாளில் இழக்கக்கொடுத்தாலும் அவர்கள் சரீரங்களைக் கிடத்தி வைத்துக்கொண்டு தேவனை ஆராதித்தான் (யோபு. 120) இச்சூழ்நிலையில் ஒருவன் தேவனை ஆராதிக்க முடியுமா? யோபுவுக்கு எல்லாமே தேவன் தான். எசேக்கியல் தீர்க்கதரிசியின் கண்ணுக்குப் பிரியமான அவன் மனைவியை தேவன் இஸ்ரவேல் ஜனங்களுக்கு ஓர் அடையாளமாக ஒரு அடியிலே எடுத்துக்கொள்வேன் என கூறியபோது அமைதியாய் கர்த்தருக்கு தன்னை ஒப்புவித்து அவர் விருப்பத்தின்படி செய்தான். (எசே. 2415 - 18) ஆண்டவரே உம் ஜனத்துக்கு அடையாளமாக உம் உத்தம ஊழியனாக என் மனைவியைத்தான் நீர் சாகடிக்கவேண்டுமோ என அவன் கேட்கவில்லை. ஏனெனில் எல்லாரையும் விட தேவனே அவனுக்கு மேன்மையுள்ளவராக இருந்தார். நம் வாழ்க்கையில் தேவன் எதையும் எந்நேரத்திலும் எப்படியும் தொடவோ எடுக்கவோ முடியுமா? நம் முழு இருதயத்துடன் அதற்கு சம்மதிப்போமா? பானபலியாக தன்னை வார்க்கப்பட ஒப்புக்கொடுத்த பவுலின் அனுபவமும் இதுவேயாகும்.

அருமை விசுவாசியே கிருபையின் கால கடைசி கட்டத்தை நெருங்கிவிட்டோம். கர்த்தர் நம்மிடம் கேட்பதெல்லாம் உள்ளன்போடு அவரை நேசிக்கும் இருதயம் தான். அவர் நம்மை தம் விருப்பப்படி எப்படியும் நடத்த ஒப்புக் கொடுப்போமாக. அவர் தம் சித்தப்படி எப்படியும் நம்மை வனய ஒப்புக் கொடுப்போமாக. பெரிய கிரயம் கொடுத்து நம்மை வாங்கியுள்ளார். நாம் நம்முடையவர்களல்லவே (1 கொரி. 6 19 20) கசப்போ தித்திப்போ மரணமோ ஜீவனோ துன்பமோ இன்பமோ எதுவாயினும் ஆண்டவரே என் விருப்பமும் என் வாஞ்சையுமல்ல ஆண்டவரே உம்முடைய பிரியமும் உம்முடைய சித்தமும் என் வாழ்க்கையை பூரணமாக நடத்தட்டும் என்ற ஜெபத்தோடு நம்மை அவருக்கு ஒப்புக் கொடுப்போமாக. ஆவியினால் நிறைந்து ஆவியின் கனி பூத்து குலுங்கும் மகிமையான வாழ்க்கை நம் பங்காகும். இந்த வாழ்க்கையில் நாம் நம்மை மறந்து நம்மோடு ஒன்றான நம் அருமை இரட்சகரோடு ஒன்றாகக் கலந்து பரிசுத்த ஆவியினால் நாம் அனுபவிக்கும் இன்ப அனுபவம் உண்டு. இதையே சிலர் பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளும் அனுபவமாக தப்பர்த்தம் கொண்டுள்ளார்கள். இது பரிசத்த ஆவியின் நிறைவேயொழிய அவரைப் பெற்றுக் கொள்ளுதல் அல்ல. இந்த பாக்கியம் விசுவாசிகளாகிய நம் ஒவ்வொருவரின் தினசரி அனுபவமாக இருக்கட்டும். தினசரி மக்கள் ஆவியின் கனியின் ஒன்பது தன்மைகளையும் அமைதியாய் நம்மில் காணட்டும். தேவ ஆவியின் நிறைவினால் நம் சுயம் நாளடைவில் பெல்னற்று போவதையும் ஆவிக்குரிய சரீரம் பெலப்பட்டு வருவதையும் நாம் காணட்டும். இதினிமித்தம் கர்த்தருடைய நாமத்துக்கும் அவருடைய சபைக்கும் வருகிற புகழ்ச்சியையும் மகிமையையும் பரிசுத்த ஆவியானவர் காணட்டும். அப்போது நம் ஆசீர்வாதம் வற்றாத நீரூற்றாயிருக்கும். இதுவே ஆவியினால் நிறைந்த வாழ்க்கை.

மயங்கும் தாசனை தேவா நீர் நடத்தும்
என் பாதை காட்டியாய் சகாயம் புரியும்

நீர் காட்டும் பாதைதான் எப்போதும் நல்லதே
சுற்றுநேர் ஆயினும் விண் வீடு சேர்க்குமே

கபோதி நான் ஐயா முன் நிற்பதறியேன்
நீர் என்னை நடத்தும் நான் பின்னே செல்லுவேன்

உம் சித்தம்போல என் பாத்ரம் எடுத்து
சந்தோஷம் சஞ்சலம் ஏதேனும் நிறப்பும்

என் பங்கேதாயினும் என் இஷ்டம் எதிலும்
வேண்டாம் என் தேவனே நீர் ஆண்டு நடத்தும்.

இதை நம் அனுதின ஜெபமாக்கிக் கொள்வோமாக.

# 7

# பரிசுத்த ஆவியானவரால் அருளப்படும் புதிய ஏற்பாட்டு மூலாதார சத்தியங்கள்

## 1. இரட்சிப்பு

எல்லா மனுஷரும் இரட்சிக்கப்பட தேவன் சித்தமுள்ளவராயிருக்கிறார் (I தீமோ.2:4)

கர்த்தர் .... ஒருவரும் கெட்டுப் போகாமல் எல்லாரும் மனந்திரும்ப வேண்டுமென்று விரும்பி நம்மேல் நீடிய பொறுமையுள்ளவராயிருக்கிறார் (2 பேதுரு. 3:9)

இரட்சிப்பு என்றால் மீட்பு, விடுதலை, மறுபிறப்பு, மனந்திரும்புதல் என பொருள் கொள்ளலாம்.

இரட்சிக்கிற இரட்சகர் இயேசு ஒருவரே. (மத்.1:21; அப். 4:12)

**இரட்சிப்பு யாருக்குத் தேவை?**

எல்லா மனுஷரும் இரட்சிக்கப்பட வேண்டும். ஏனெனில் எல்லாரும் பாவஞ்செய்து தேவமகிமையற்றவர்களானோம். (ரோமர். 3:23, 24) எல்லாரும் பாவத்தில் பிறந்து பாவத்தில் ஜீவிக்கிறோம் (சங். 51:5, யோபு. 25:4)

**இரட்சிப்பு எப்படி கிடைக்கிறது?**

தேவ ஆவியானவரால் ஒருவன் பாவ உணர்வடைந்து ஆத்தும இரட்சிப்பை வாஞ்சித்து சுவிசேஷத்தை ஏற்றுக்கொள்ளும் அந்தகணமே சிலுவையில் அறையப்பட்டு மரித்து உயிர்தெழுந்த இரட்சகராகிய இயேசு கிறிஸ்துவின் மாசற்ற இரத்தம் அவனது பாவமனைத்தையும் கழுவி அவனை சுத்தப்படுத்துவதை அறிவான். ஒருவரும் பெருமை பாராட்டாத படிக்கு இது ஞானஸ்நானம் பெறுதல் உட்பட எந்த நற்கிரியை யினாலும் உண்டானதல்ல. கிருபையினாலேயே விசுவாசத்தைக் கொண்டு இரட்சிக்கப்படுகிறோம். ஆகவே இரட்சிப்பு தேவனுடைய ஈவேயாகும். (எபே. 1:7,8; 2:5,9; கொலோ. 1:14; ரோமர். 3:23,24; 1 பேதுரு 1:18,19) இது தேவன் நமக்கு ஆதிமுதல் நம்மை முன்குறித்து தம் குமாரனுக்குள் கொடுத்திருப்பதாகும். (2 தெச. 2:13, 14, ரோமர் 8:29,30)

**இரட்சிக்கப்பட்டவர்களின் சிலாக்கியம் என்ன?**

புதுசிருஷ்டியாக்கப்படுகிறார்கள் (2 கொரி 5:17), பாவ மன்னிப்பு பெறுகிறார்கள், (அப். 10:43), மெய் சமாதானமும் சந்தோஷமும் கிடைக்கிறது. (ரோமர். 5:1; கொலோ. 1:20; எபே. 2:15-17), நித்திய சுதந்திரம் அவர்கள் பங்காகும், (1 பேது 1:4,5; லூக். 10:20; 2 கொரி 5:1; ரோமர். 8:17,32) அவர்கள் இம்மையிலும் மறுமையிலும் நித்திய பாதுகாப்பைப் பெற்றுக் கொள்கிறார்கள் (யோ. 10:28-30; யூதா. 24,25; எபி 9:12)

## 2. ஞானஸ்நானம்

இது தேவ ஆலோசனை (லூக். 7:30); தேவ கட்டளை (மத். 28:19); தேவ நீதி (மத். 3:15); நல் மனசாட்சியின் உடன்படிக்கை (1 பேது. 3:21) இரட்சிப்பைப் பெறுவதற்காக அல்ல இரட்சிக்கப்பட்டபின் விசுவாசி கீழ்ப்படிய வேண்டிய முதல் தேவகட்டளை ஞானஸ்நானமாகும்.

**யார் பெற வேண்டும்?**

இரட்சிக்கப்பட்டு விசுவாசிகளானவர்கள் மாத்திரமே (அப். 2:41; மாற்கு. 16:16; அப். 8:36,37)

**எப்படி பெற வேண்டும்?**

ஸ்நானம் என்ற வடமொழி சொல்லுக்கு அர்த்தம் முழுகுதல் என்பதாகும். ஆகவே ஞானஸ்நானத்தை திரு முழுக்கு என சிலர் அழைக்கிறார்கள், முழுகுதல் என்றால் தெளித்தல் அல்ல. தண்ணீரில் முழுகி எடுப்பதே ஞானஸ்நானமாகும். ஓர் விசுவாசியின் வாழ்க்கையில் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை இரட்சகராக ஏற்றுக் கொண்ட அனுபவம், மற்றும் கிறிஸ்துவோடு மரித்து அடக்கம் பண்ணப்பட்டு புது சிருஷ்டியாக எழுந்த அனுபவம், இவைகளின் வெளியரங்கமான அடையாளமே ஞானஸ்நானம். (ரோமர். 6:3-5; கொலோ. 2:12) தண்ணீர் தெளித்து ஞானஸ்நானம் கொடுப்பதாக் கூறுவது அர்த்தமற்றதாகிறது.

## 3. அப்பம்பிட்கும் ஆராதனை

அப்போஸ்தலரின் உபதேசத்தை கடைபிடிக்கும் விசுவாசிகள் அப்போஸ்தலரைப் போல வாரத்தின் முதல்நாள் தோறும் கூடி அப்பம் பிட்டு கர்த்தரை ஆராதிக்கிறார்கள் (அப். 2:41,42, 20:6,7) விசுவாசிகள் மாத்திரமே அப்பம் பிட்டு கர்த்தரை ஆராதிக்க தகுதியுள்ளவர்கள்

(2 கொரி 6:14,15,16 ; 1 கொரி. 10:16,21; 11:23-33) ஸ்தோத்திர பலியோடு (எபி. 13:15) பரிசுத்த அலங்காரத்தோடு (சங். 96:9, 1 கொரி 5:7,8; யாத். 13:7; 12:5, 19) கர்த்தருடைய பந்தி ஆசரிக்கப்படுதலே தேவனால் அங்கீகரிக்கப்படும். கிறிஸ்துவின் அன்பின் தியாகமும் மரிக்கக் கூடாதவர் நமக்காக மரித்ததும், அவரை நமக்காக பாவமாக்கி பாவ பலியாக ஒப்புக் கொடுத்ததுமான பிதாவின் அன்பும், அவரது வருகை மட்டும் நன்றியுள்ள இருதயத்துடன் நினைவுகூறப்படுகிறது. (மத். 26:26,28; 1 கொரி. 11:25)

## 4. சபை ஐக்கியம்

சபை என்றால் செங்கற் கட்டிடம் அல்ல. விசுவாசிகளின் குழுமமே சபை எனப்படுகிறது. கர்த்தர் பூர்வ காலத்திலேயே தம் சபையை சம்பாதித்துள்ளார் (சங்.74:2) இரட்சிக்கப்பட்டவர்களை கர்த்தர் சபையிலே சேர்க்கிறார் (அப். 2:47) ஆகவே இரட்சிக்கப்பட்டவர்களும் இரட்சிக்கப்படாத வர்களுமுள்ளது சங்கம் எனப்படலாம்; அது சபையாகாது. சபைக்கு தலை கிறிஸ்துவே (எபே. 5:23) விசுவாசிகள் அனைவரும் சம அந்தஸ்து பெற்ற அங்கத்தினர்களேயாவர் (1 கொரி. 12:12-31) அவரவர்களின் உபயோகத்துக் கென்று வரங்கள் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன்மூலம் கிறிஸ்துவின் நாமம் மகிமைப்பட்டு அநேகர் அவரண்டை சேர்க்கப்படுகிறார்கள். சபை இவ்வுலகில் கிறிஸ்துவுக்கு சாட்சியாகவும் வைக்கப்பட்டிருக்கிறது (அப். 1:8). கர்த்தருடைய வருகையில் அவருடைய பரிசுத்தவான்களைக் கொண்ட சபை மத்திய வானில் எடுத்துக் கொள்ளப்பட்டு நித்தியத்தை அவருடன் கழிக்கப்போகிறது (1 தெச 4:16,17; 1 கொரி. 15:49-55)

தம் பரிசுத்த இரத்தத்தினால் மீட்டுக் கொண்ட தம் சபையை இவ்வுலகில் நிர்வாகிக்க தலையாகிய கிறிஸ்து சிலரை அப்போஸ்தலர் களாகவும், சிலரை தீர்க்கதரிசிகளாகவும், சிலரை சுவிசேஷர்களாகவும், சிலரை மேய்ப்பராகவும், போதகராகவும் ஏற்படுத்துகிறார். (எபே. 4:11-13). கிறிஸ்து தம் சபையில் எல்லோரையும் இந்த வேலைக்கு ஏற்படுத்தாமல் சிலரை மாத்திரம் ஏற்படுத்தி வைக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது. இதிலுள்ள முதல் இருவரும் அதாவது அப்போஸ்தவரும், தீர்க்கதரிசிகளும் சபையின் அஸ்திபார வேலைகளை முடிக்க நியமிக்கப்பட்டவர்களாயிருந் தார்கள். (எபே. 2:20) ஆகவே அவர்கள் வேலை முடிந்துவிட்டது; இப்போ மற்ற மூன்று பேராகிய சுவிசேஷகர்கள், மேய்ப்பர்கள், போதகர்கள் தான் புதிய ஏற்பாட்டு சபையில் கர்த்தரால் நியமிக்கப்பட்டு ஊழியம் செய்கிறார்கள்.

இது மனுஷனால் கொடுக்கப்படும் பதவி நியமிப்பு இல்லை. தேவனுடைய சபையிலே பொறுப்பை கொடுப்பது சபையின் தலையாகிய கர்த்தர் தான். அப்படிப்பட்டவர்களை எந்த சந்தேகமுமில்லாமல் சபையிலுள்ள ஆவிக்குரிய விசுவாசிகள் அங்கீகரிக்கிறவர்களாயிருப்பார்கள். இவர்களில் சிலர் சபையின் உலகப்பிரசாரமான நிர்வாகத்தை கவனிக்கவும் விசுவாசிகளின் பொது நலத்தில் ஈடுபட்டு செயலாற்றவும் கர்த்தரால் மூப்பர்களாக அதாவது கண்காணிகளாக சபையாரால் ஏற்றுக் கொள்ளப்படுகிறார்கள். இவர்களுடைய தகுதிகளைப்பற்றி 1 தீமோ. 3:1-7 லும், தீத்து. 1:6-9 லும் தேவ ஆவியானவர் அழகாக விளக்கியிருக்கிறார். இவைகளை சுருங்கக்கூற வேண்டுமானால் மூப்பர்கள் என சபையாரால் வேதவசனத்தின்படி அங்கீகரிக்கப்படுகிறவர்கள் தங்கள் தனிப்பட்ட முறையிலும், குடும்பத்திலும், சமுதாயத்திலும், அன்பிலும், பரிசுத்தத்திலும் நல்ல சாட்சியுள்ளவர்களாயிருப்பார்கள். இதனிமித்தம் அவர்கள் பிள்ளைகளும் இரட்சிக்கப்பட்டு தங்கள் பெற்றோருடைய விசுவாசத்தையும் அவர்கள் மூலம் போதிக்கப்பட்ட சத்தியத்தையும் கைக்கொண்டு அடங்கி நடக்கிறவர்களாயிருப்பார்கள்.

சபையில் பெண்களுக்கும் ஊழியங்கள் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவைகள் அனைத்தும் பெண்கள் நடுவிலும், பிள்ளைகள் நடுவிலும் நடத்தப்படும் அமைதியான ஊழியங்களே ஆகும். தலைமைத்துவம் கொண்டுள்ள ஊழியங்களாகிய சபையை நடத்துதல், சபையில் உபதேசம் பண்ணுதல் முதலிய அதிகாரங்கள் அவர்களுக்குக் கொடுக்கப்படவில்லை. (1 கொரி.14:34, 35; 1 தீமோ. 2:11,12; தீத்து. 2:3-5)

ஒரு சபைக்கு ஒரு மூப்பர் அல்லது ஒரு மேய்ப்பர் (pastor) என வேதம் போதிக்கிறதில்லை. சரீரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட அவயவங்கள் இருப்பது போல கிறிஸ்துவின் சரீரமாகிய சபையில் தேவன் ஒன்றுக்கு மேற்பட்ட மூப்பர்களை நியமித்து அவர்கள் அவயவங்களாகி ஒருங்கிணைந்து தம் நாம மகிமைக்கென்று செயல்பட சித்தமுள்ளவராயிருக்கிறார். இவ்விதமாய் வேதவசனத்தின்படி பரிசுத்த ஆவியானவரின் ஆளுகையில் இயங்கும் சபை இவ்வுலகில் தேவ அன்பைக்காட்டும் தீபஸ்தம்பமாக விளங்கி அநேகருடைய உள்ளங்களைத் தேற்றி ஆதரித்து அநேகருடைய இரட்சிப்புக்குக் காரணமாயிருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

பரிசுத்த ஆவியானவர் தெளிவாக வெளிப்படுத்தியுள்ள இவ்வித புதிய ஏற்பாட்டு மூலாதார சத்தியங்களைக் கைக்கொண்டு நடக்கும் விசுவாசிகள் கூடும் சபையில் நாம் ஐக்கியப்பட்டு கர்த்தரை மகிமைப்படுத்தவே அவர் விரும்புகிறார். அப்படிப்பட்ட சபையானது உலகத்தின் கண்களுக்கு சிறுபான்மையினரை உடையதாகவே காணப்படும். எந்த கிறிஸ்தவ மதப்பிரிவையும் சேராமல் கிறிஸ்துவின் ஒப்பற்ற அன்பையும், சத்தியத்தையும் வெளிப்படுத்தி கிறிஸ்தவ விசுவாசிகளின் சபை என அழைக்கப்பட்டு கர்த்தருக்கும் அவரது வசனத்துக்கும் சாட்சியாய் இயங்குகிறதாயிருக்கும். வேத சத்தியங்களை உள்ளன்போடு ஏற்று நடக்க விரும்பும் ஒவ்வொரு விசுவாசியும் இதில் காணப்படுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. இப்புத்தகம் படித்து முடிக்கும் உங்கள் தீர்மானம் என்ன?

## அறிமுகப்படுத்துகிறோம்

## "ஸ்தானாபதி" பத்திரிகை

உங்க குடும்பத்துக்கு இன்றியமையாத "ஸ்தானாபதி" என்ற ஓர் கிறிஸ்தவ குடும்ப மாதப் பத்திரிக்கையை அறிமுகப்படுத்துவதில் மகிழ்ச்சியடைகிறோம்.

### இதன் சிறப்பு அம்சங்கள்

★ ஆவிக்குரிய செய்திகள்

★ மிஷனரி சவால்கள்

★ பெண்கள், வாலிபர், சிறுவர் பகுதிகள்

★ பெரியோர், சிறியோருக்கான வேதாகம கேள்வி மற்றும் வேதாகம புதிர் பகுதிகள்

★ தினசரி தியானக் குறிப்புகள்

★ சபைகளின் செய்திகள்

மற்றும் பல இன்சுவை பகுதிகள் கொண்டதாக உங்கள் இல்லந்தேடி வரும் இப்பத்திரிக்கையின் வருட சந்தா ரூ.120/- தான். இலவச மாதிரி பிரதிக்கு இன்றே எழுதுங்கள்.

**"ஸ்தானாபதி"**

CI, HBI பிளாட்ஸ், 25 குட்டியப்பன் 2-வது தெரு,
கீழ்ப்பாக்கம், சென்னை - 600 010.
தொலைபேசி : 044 - 26423785

---

குறிப்பு : 1951ம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்ட இப்பத்திரிக்கை இந்தியாவில் மட்டுமல்ல அயல் நாடுகளில் வசிக்கும் தமிழர்கள் இல்லங்களை சந்தித்து வருகிறது.